ஜெயகாந்தனின்

# ஜய ஜய சங்கர...

முழு நாவல்




விலை 1 ரூபாய்




கால் ஆண்டு வெளியீடாக
ஒரு ரூபாய் மலிவு விலையில்
மக்களுக்கு வழங்கும்

**ஜெயகாந்தன்**
**எழுதும்**

# புதிய படைப்புகள்

சந்தாதாரர்களாக விரும்புவோர்
4 வெளியீடுகளுக்கு தபால் செலவு உட்பட
**ஆண்டு சந்தா ரூ. 5-00**
அனுப்பிப் பதிவு செய்து கொள்ளவும்.

ஜனவரியில் வெளியாகும் அடுத்த பிரசுரம்
**'மனவெளி மனிதர்கள்'**

**விவரங்களுக்கு:**
**மோதி பிரசுரம்**
**சென்னை-600017.**



ஈஸ்வரோ ரக்ஷது!

"பத்திரிகையாளர்களும், எழுத்தாளர்களும்தான் இன்றையப் பௌராணிகர்கள். சூதரும் மற்றப் பௌராணிகர்களும் எப்படிப் பிரசாரம் செய்தார்களோ அவ்விதமே செய்யவேண்டியது இன்றையப் பத்திரிகையாளர்கள், எழுத்தாளர்களின் கடமை. ஜனங்களுக்குப் பிடித்ததை மட்டுமே சொல்வது என்று வைத்துக் கொள்ளக் கூடாது...

வெறும் இந்திரிய ரஞ்சகமான சமாசாரங்களில்தான் ஜனங்களுக்கு அதிகக் கவர்ச்சி இருக்கிறது என்று சொல்லிக்கொண்டு இவ்விதமே எழுதுவது சரியல்ல. ஜனங்களுக்கு ஆத்மாபிவிருத்தி தருகிற முறையில் எழுது

வதற்கு இருதயபூர்வமாக எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்கள் முனைந்தால் தானாகவே ஜனங்களுக்கு அதில் ருசி பிறக்கும். 'நம்மையும் உயர்த்திக் கொண்டு நம் வாசகர்களையும் நாம் உயர்த்தவேண்டும் என்கிற கடமை உணர்ச்சியைப் பெறவேண்டும். இவ்விதம் ஆத்மக்ஷேமம், லோகக்ஷேமம், சாந்தி, சுபிட்சம் எல்லாவற்றுக்கும் மெய்யான சேவை செய்கிற பாக்கியத்தைப் பத்திரிகையாளர்கள், எழுத்தாளர்கள் பெறவேண்டும்.''

*—ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்*

நமது பத்திரிகையாளர்களுக்கு மேற் சொன்ன அந்த பாக்கியம் லபித்ததோ என்னவோ, ஆசார்ய ஸ்வாமிகளின் ஆக்ஞைக்கு ஏற்ப, இயல்பாகவே எழுதுகிறவன் என்கிற முறையில் இந்த மேலான பாக்யத்தை முழுமையாக அடைந்துள்ளவன் நான். இதன்பொருட்டு நானும், என் சமகாலத் தமிழ் மக்கள் அனைவரும் மகிழ்ச்சியும் பெருமையும் அடைவது இயல்பு.

இந்த 'ஜயஜய சங்கர' ஒரு கதை; கற்பனை; கனவு; ஆனால் பொய் அல்ல; சத்தியம். உங்கள் நடைமுறை வாழ்க்கையைவிடவும், நமது நிதர்சனங்களைவிடவும், எனது கனவுகளும் கற்பனைகளும், கதையும், மேலான அர்த்தமும் ஆக்கசக்தியும் உடையவை. நான் எழுதுவதுதான் முக்கியமே தவிர எந்தப் பத்திரிகையில் அல்லது பனை ஓலையில் எழுதினேன் என்பதால் எழுத்தின் தலைவிதி நிர்ணயிக்கப்படுவதில்லை. எழுத்தின் தலைவிதி எழுதப்படுவதாலேயே தீர்மானமாகிறது ... விளைவுகள் நம் அனைவரையும் மேன்மையுறச் செய்யட்டும்.

ஜெயகாந்தன்

# ஜயஜய சங்கர

## அத்தியாயம்—1

காலஓட்டத்தில் ஒரு நாகரிகத்தின் வாழ்க்கையே பொய்யாய், கனவாய், பழங் கதையாய் மெல்லப் போயிற்றோ என்று எண்ணும்படியாகவும், இறந்த காலத்தின் எலும்புக்கூடுபோலவும் சங்கரபுரம் இன்றும் வாழ்ந்துகொண்டிருக்கிறது. அங்கும் நாஸ்திகம் என்னும் நிர்மூடவாதம் ஓர் நாகரிகமாய்க் கவிந்திருக்கிறது. கோயிலுக்கு முன்னாலுள்ள மைதானத்தில் கால மழையில் கரைந்துபோகிற ஒரு சிலையை எழுப்பி அதன்கீழ் 'கடவுளை நம்புகிறவன் முட்டாள்' என்றும், அதுமாதிரியான இன்னும் ஏதேதோ மொழிகளையும் கல்லில் செதுக்கி வைத்திருக்கிறது. ஊர் எத்தனை வகைப்பட்டுப் பகைகொண்டு பிரிந்து மோதிக் கொண்டிருக்கிறது என்பதற்கடையாளமாய்ப் பல கம்பங்களில் பல கொடிகள் அங்கு பறந்து கொண்டிருக்கின்றன. அக்ரகாரம் முழுவதும் அநேகமாய்க் குட்டிச்சுவர். இன்னும்கூட உயிர்ப்போடு விளங்குவது சிவன் கோயில் அர்ச்சகர் அப்பைய குருக்கள் வீடு ஒன்றுதான்.

அவருக்குப் புத்திர பாக்கியம் இல்லாதது சிவன் செய்த பாக்கியம். அவருக்கும் குழந்தைகள் இருந்திருந்தால் அந்தச் சாக்கில் பட்டணத்துக்கோ, பம்பாய்க்கோ, டெல்லிக்கோ அல்லது வேறு விதேசி தேசத்துக்கோகூட, அந்த அக்ரகாரத்திலிருந்து சில பேர் போயிருக்கிறார்களே, அதுமாதிரி அவரும் போயிருக்கக் கூடுமாம்! அவரது மனைவிக்கே வயது எழுபத்தைந்துக்கு மேல். தலைநடுக்கத் தோடு சம்பிரதாயம் தவறாமல் வீட்டுக்கு முன்னால் ஏதோ கன்னா பின்னாவென்று கோலம் போடுகிறாள். கைநடுக்கத்தோடு வாசல் மாடத்தில் விளக்கேற்றி வைக்கிறாள். குரல் நடுக்கத்தோடு கௌரி ஸ்தோத்திரம் பாடுகிறாள். பகலில் வீட்டிற்குள், ஓடுகள் சரிந்த கூரை வழியாக வெயிலின் கிரணங்கள் சதுரமிழைத்து விளையாடு வதை மோவாயில் ஊன்றிய கையுடன் பார்த்துக் கொண்டிருக் கிறாள். முன்பக்கத்தில் திண்ணையின் மீதுள்ள ஒரு தூண் அடியில் கரையான் அரித்து விட்டதால் ஒரு கருங்கல் முட்டுக் கொடுக்க நிற்கிறது. ஆனாலும் முன்பக்கத்து உத்திரம் பல்லக்குப்போல் வளைந்து தொங்குகிறது. ஒரு கேள்விக்குறி மாதிரி அந்த வீட்டிற்குள் ளிருந்து வெளி உலகத்தை நோக்கி வருகிறார் அர்ச்சகர். இடுப்பில் கோயில் சாவி, கையில் துணியால் மூடப்பட்ட வெண்கலப் பானை. அதனுள் வெண்சோறு. அவரது நாபியி லிருந்து சரம்சரமாய்ப் பெருகிவரும் மஹா ருத்ரமந்திரம்.

குருக்கள், கோயிலைத் திறந்து உள்ளே போய்க் கேணியில் தண்ணீர் சேந்துகிறார். கோயில் வாசற்படியில் ஊர் சோம்பேறிகள் கூடி இருந்து புகைத்தெறிந்த பீடித் துண்டுகள், வேர்க்கடலைத் தோல் இன்னும் அவர்கள் அங்கிருந்ததால் சேர்ந்த அனாசாரங்கள் அனைத்தும் அடித்துக்கொண்டு போகட்டும் என்று தண்ணீரை வீசி வீசி ஊற்றுகிறார். பிறகு கோயில் நந்தவனத்தில் சுவர் சரிந்து விழுந்த செங்கற்குவியல்களுக்கு இடையில்போய் மண்டிக்கிடக்கும் செடிகளிலிருந்து புஷ்பம் கொய்கிறார். சிவலிங்கத்துக்கு அபி ஷேகம் செய்கிறார். வஸ்திரம் மாற்றுகிறார். மடியில் இருந்த பொட்டலத்தை அவிழ்த்துச் சல்லி அளவுள்ள சந்தன வில்லையைக் குழைத்துச் சிவலிங்கத்தின் நெற்றிக் கண்ணை, சந்திரன் அளவுக்குத் திலகமிட்டு மறைக்கிறார். விளக்கேற்றுகிறார். புஷ்பம் போடு கிறார். வேதம் ஓதுகிறார். கைகூப்பி நின்று கண்ணீர்மாலை வடிக்கிறார். வெண்கலப் பானையிலுள்ள வெள்ளைச் சோற்றை நிவேதனம் செய்கிறார்.

இவரைப் பற்றி எல்லோரும் என்ன நினைக்கிறார்கள்? எல்லாம் அந்த வெண்கலப்பானையுள் இருக்கும் வெண்சோற்றுக்குத்தானாம்!

ஊரில் மிகப் போக்கிரி என்று பேரெடுத்த ஒருவன் ஏதேதோ காரணங்களால் மிக செல்வாக்குடையவனாகிக் கோயில் தர்ம கர்த்தாவாகவும் உயர்ந்திருக்கிறான்...

கோயிலிலிருந்து வீட்டுக்குத் திரும்புகிற அர்ச்சகரை ஒரு காலத்தில் வேத அத்யயனம் பண்ணுகிற சங்கர மடமாகவும், இப்போது உரக்கிடங்காகவும் மாறியிருக்கிற அந்தச் சத்திரத்துத் திண்ணையில் கால்மேல் கால் போட்டு உட்கார்ந்திருக்கிற அந்த தர்மகர்த்தாப் பையன் ஒரு பணியாளை அனுப்பிக் கூப் பிடச் சொன்னான். குரல் பாய்ச்சிக் கூப்பிட்டால் அவருக்குக் காதுகேட்காதாம். இவர்களது பேச்சுக்களை எல்லாம் கேட்டு அவர்

மௌனமாயிருப்பதாலும், இந்தக் குழந்தைகள் தெருவெல்லாம் கிறுக்கிவைக்கிற வாசகங்களைப் படித்து எந்த உணர்ச்சியையும் காட்டாதிருப்பதாலும் குருக்களுக்குக் காது செவிடு என்றும், பார்வை மங்கலென்றும் மிக சௌகரியமாகவே பேர் பண்ணி விட்டார்கள்; இல்லை, அவரே பண்ணிக்கொண்டு விட்டார்.

''சாமி'' என்று எதிரில் வந்து நின்ற ஒரு நிழலைப் பார்த்து, அது காட்டுகிற திசையில் நின்றிருக்கிற மனிதர்களையும் பார்த்தார் குருக்கள்.அவர் இங்கு வருவதைப் பார்த்ததும் அந்த தர்மகர்த்தாப் பையன் மரியாதையாய் எழுந்து நின்றான். அவன் பக்கத்தில் வெளியூர்க்காரர்கள் என்று பார்த்த மாத்திரத்தில் தெரிகிற மூன்று பேர் நின்றிருந்தனர். ஒருவன் கழுத்தில் காமரா மாட்டி யிருந்தான். இன்னொருவன் குறிப்புப் புத்தகமும் பேனாவும் வைத்திருந்தான். மற்றவன் சும்மா நின்று நகத்தைக் கடித்துக் கொண்டு இருந்தான்.

தர்மகர்த்தா குருக்களிடம் உரத்த குரலில் பேசினான்: ''சாமி, இவங்க பட்டணத்திலேருந்து வந்திருக்காங்க.... இந்த ஊரைப் பத்தி என்னமோ பேப்பர்லே எழுதப் போறாங்களாம். நீங்கதானே எல்லா விசயமும் தெரிஞ்ச பெரிய மனுஷர்....'' என்றதும் அந்த மூவரும் அர்ச்சகருக்கு வணக்கம் தெரிவித்தனர்.

''உங்களுக்கு என்ன தெரிஞ்சுக்கணும்?'' என்று அந்த மூவரை யும் பார்த்துக் கேட்டார் குருக்கள்.

''ஆச்சாரிய சுவாமிகள் திருவவதாரம் செய்த க்ஷேத்திர மில்லையா, இது? அவா பிறந்த வீடு, பூர்வாசிரமத்திலே அவா குடும்பம் – அவாளைப்பத்தி இன்னும் திவ்யமான செய்திகள் எல்லாம் உங்களைப்போல பெரியவாளுக்கு எவ்வளவோ தெரிஞ் சிருக்குமே... அதிலே கொஞ்சம்; இந்த ஊரைப்பத்திக் கொஞ்சம்; கோயிலைப் பத்தி விசேஷங்கள் இருக்குமே, அதிலே கொஞ்சம்... உங்களைப் பத்தியும்கூடக் கொஞ்சம் சொல்லணும்'' என்று ஒருவன் கேட்டுக் கொண்டிருக்கையில், ஒருவன் போட்டோ எடுத்தான். அந்த மின்னல் வெளிச்சத்தில் அர்ச்சகரின் கண்கள் கூசின: ''எல்லாத்திலேயும் கொஞ்சம்... கொஞ்சம் போறுமோ?'' என்று வாய்க்குள் முணகிக்கொண்டார்.

''சரி. என் பின்னோடே வாருங்கோ....'' என்று மூவரையும் அழைத்துக்கொண்டு ''வேறு ஏதாவது?'' என்று தர்மகர்த்தா வைப் பார்த்தார்.

''எங்கள் ஐயர் பழைய சமாசாரமெல்லாம் ரொம்பத் தெரிஞ்சவர்...அந்தக் காலத்து மனுஷன். வாயைக் கிளறி விட்டீங் கன்னு நெறையவே விஷயம் வரும்'' என்று மற்றவர்களிடம் சொன்னான் தர்மகர்த்தா. குருக்கள் அதையெல்லாம் காதில் வாங்கிக்கொண்டதாகக் காட்டிக்கொள்ளாமல் 'அப்ப நான் வரேன்' என்று திரும்பி நடந்தார். ஊர் பார்க்க வந்த மூவரும் அவரைத் தொடர்ந்தனர்.

அக்ரகாரத்துக்கு வருகிறபோது ஒரு பழைய வீட்டின்முன் நின்றார் அர்ச்சகர்; ''இதுதான் பெரியவா பிறந்த வீடு....''

பூட்டிக்கிடந்த அந்த வீடு உடனே போட்டோ எடுக்கப் பட்டது.

''அந்தக் காலத்திலே மகாலிங்க ஐயர்னு ஊரிலே மகா சிரேஷ்டரான பிராமணர். வேதபர்வதம்; சாஸ்திர சமுத்திரம்; இந்தக் கோயிலும் ஊரும் அவர் பரிபாலனத்திலே இருந்ததுன்னு சொல்லணும். இப்ப சித்தமின்னே நீங்க நின்னுண்டிருந்தேளே உரக்கிடங்கு.... அதுதான் அப்ப சங்கரமடம்; வேத பாட சாலே... மகாலிங்க ஐயருக்கு ஏகபுத்ரனுகப் பிறந்தார் சங்கரன்... பூர்வாசிரமத்திலே இவருக்குப் பெயர் சங்கரன். பத்துப் பன்னிரண்டு வயசுவரைதான் இங்கே இருந்தார்...'' என்று சொல்லி ஒரு விஞடி அவர் மனம் அந்தக் காலத்து சங்கர மடத்து வேத ரீங்காரத்தில் லயித்தது.

போட்டோ எடுத்துக் கொண்டதும், பரபரவென்று விஷயங்களையெல்லாம் ஒருவன் குறித்துக் கொண்டான்.

''மகாலிங்க ஐயருக்கு சதாசிவ ஐயர்னு ஒரு தம்பி. அவரும் அண்ணுவைப்போல சம்ஸ்கிருதம், தமிழ், மேலும் இங்கிலீஷ் எல்லா பாஷைகளிலும் தேர்ந்தவர். மகாலிங்க ஐயர் காலத்திலே இங்கிலீஷ் மோகம் அறவே கிடையாது... அறிவோம்னு இந்த ஊர்லேருந்து டவுனுக்குப்போயி இங்கிலீஷ் படிப்புப் படிச்சவரே சதாசிவ ஐயர்தான். அவருக்குப் பின்னுலே எவ்வளவோ பேர் போனு.... என்னென்னவோ படிச்சா; கடைசியிலே ஒவ்வொருத்தரா எங்கெங்கேயோ எல்லாருமே போயிட்டா....அது வேற கதை....''

அர்ச்சகர், வீடு நெருங்கியதும் உடன் வந்தவர்களைத் திண்ணையில் உட்காரச் சொல்லிவிட்டு 'ஏதாவது தாகத்துக்குச் சாப்பிடறேளா? மோர் தரட்டுமா?'' என்று அவர்களை உபசரித்தார். கதை கேட்கிற சுவராஸ்யத்தில் ''உங்களுக்குச் சிரமம் வேண்டாம்.... ஜலம் மட்டும் குடுங்கோ போறும்'' என்றனர் மூவரும். உள்ளே போய் வெண்கலப் பானையைவைத்து விட்டு வேறு ஒரு செம்பில் ஜலமும் தம்ளரும் கொண்டுவந்து அவர்கள் முன் வைத்தார்.

''மகாலிங்க ஐயரின் தம்பி சதாசிவ ஐயரைப் பற்றிச் சொல்லிண்டிருந்தேள்..'' என்று விட்ட இடத்திலிருந்து கதையை எடுத்துக் கொடுத்தான் குறிப்புப் புத்தகத்தோடு இருந்தவன்.

''சதாசிவ ஐயர் இங்கிலீஷ் படிக்கப் போனுர்.... அப்பகூட ரொம்ப ஆசாரத்தோட இருந்தார்.... அதெல்லாம் சும்மா சொல்லப்படாது. அவர் மேல்சட்டை கூடப் போட்டுக்கமாட்டார். ஊருக்கு வெளியேபோய்ச் சட்டை மாட்டிக்கொண்டு காலேஜுக்குப் போவார். திரும்பி வரச்சே ஊர் எல்லையிலேயே சட்டையைக் கழற்றிக் கொண்டு ஆற்றில் ஸ்நானம் செய்து விட்டுத்தான் அக்ரஹாரத்துக்குள் நுழைவார். அப்படித்தான் இருந்தார் கடைசி வரைக்கும்.... திடீர்னு அவருக்கு காந்தி மேலே ஒரு பிரீதி.... வெறியே ஏற்பட்டுடுத்து.... சட்டைகூடப் போட்டுக்காத மனுஷன் காந்திக் குல்லாயை மாட்டிண்டு, ஆலயப் பிரவேசம், தீண்டாமை ஒழிப்புன்னு ரொம்பத் தீவிரமாகிச் சேரிக்கே போக ஆரம்பிச்சுட்டார்....''

''அப்புறம் என்ன நடந்தது..!'' நகத்தைக் கடித்துக் கொண்டிருந்த மூன்றுமவன் ரொம்ப ஆர்வமாய்க் கேட்டான்...

''மகாலிங்க ஐயருக்கு நான் எவ்வளவோ தைரியம் சொல்லிப் பார்த்தேன். ஆனு அவர் இந்த ஊர்லேயே இருக்க மாட்டேன்னு சம்சாரத்தையும் அழைச்சிண்டு காசிக்கு ஓடிப்போயிட்டார். போற போது தன் ஒரே மகன் சங்கரனை ஸ்ரீ மடத்திலே விட்டுட்டுப் போனுர்....பூர்வாசிரமத்திலே குழந்தையா பார்க்கறச்சயே தெய்வ அநுக்ரகம் பெற்ற குழந்தைன்னு நேக்குத் தோணி யிருக்கு... வாருங்கோ ஆத்தங்கரை வரைக்கும் போயிட்டு வரலாம்.... ஊரையும் பார்க்கலாம்'' என்று அர்ச்சகர் முன்னுல் நடந்தார்.

''ஒருநாள் மாட்டுத்தோல் வார்போட்ட தமுக்கை மார் மேலே சாச்சிண்டு 'ஆலயப் பிரவேசம்னு' இந்தக் கோயில் முன்னுலே தண்டோரா போட ஆரம்பிச்சுட்டார்... சதாசிவ ஐயர்.''

''அப்புறம் என்ன ஆனுர்?....''

''அண்ணுவும் மன்னியும் இவாளை விட்டுட்டுப்போனதும் சதாசிவ ஐயர் குடும்பத்தோட கிளம்பிட்டார். அதோ தெரியறது பாருங்கோ.... ஆத்துக்கு அக்கரையிலே சேரி.... மூங்கில் குடின்னு பேரு; அங்கே காந்திஆசிரமம்னு ஒண்ணு நடத்திண்டிருந்தார். மகாத்மாகாந்தி கூட அந்த ஆசிரமத்துக்கு விஜயம் பண்ணி யிருக்கார் — அந்த ஆஸ்ரமத்துக்கே குடிபோயிட்டார். எல்லாம் ஒரு அதிசயமாத்தான் நடந்து ஒரு அதிசயமாவே போச்சு போங்கோ...'' என்று பெருமூச்செறிந்தார், குருக்கள்.

ஆற்றங்கரையருகே உள்ள அரசமரத்து மேடையருகே நால்வரும் வந்து நின்றனர்.

தண்ணீரில்லாத ஆற்று மணல்வெளிக்கு அப்பால் பறைச் சேரி மட்டும் இப்போதும் தெரிந்தது. தூரத்தில் வயலில் பெண் கள் நடவு நட்டுக் கொண்டிருந்தார்கள்...

''சதாசிவ ஐயரோட குடும்பம், குழந்தைகள் எல்லாம்?''

''அவருக்கு நோயாளியாகவே ஒரு மனைவியிருந்தாள்... ஒரு பெண் குழந்தையும் இருந்தது... அவாளையும் அழைச்சிண்டுதான் ஆசிரமத்துக்குப் போனுர்னுசொன்னேனே. அவா என்ன ஆனுன்னு தெரியலே'' என்று வானத்தைப் பார்த்து யோசனையில் ஆழ்ந்த அர்ச்சகர் சொன்னுர்: ''இதோ பாருங்கோ... இந்தப் பூமி எவ்வளவோ உற்பாதங்களை — இயற்கையாகவும் செயற்கை யாகவும் ஏற்படுகிற அழிவுகளையெல்லாம் தாங்கிண்டுதான் இன்ன மும் இருக்கு. இந்த லோகத்திலே எது நின்னுலும் அழிஞ்சாலும், எல்லாரும் வெறும் கல்லுன்னு நெனைக்கிற இந்தச் சிவலிங்கத் துக்குத் தினசரி குளிர்ந்த நீரிலே அபிஷேகமும், ஏதோ கிடைக்கிற புஷ்பங்களைக் கொண்டு அர்ச்சனையும் நடந்துண்டுதானிருக்கு. எத்தனையோ யுகங்களா நடந்துண்டு இருக்கு. நம்ப மதம் எந்தக் குருவையும், எந்த ஆசாரியாளையும் நம்பி வாழ்ந்துண்டி ருக்கலே? எல்லா குருவும், எல்லா ஆசாரியாளும் ஒரு நம்பிக்கை யின், நம்ப சிரஞ்சிவியா பாத்துண்டு இருக்கிற ஒரு நாகரிகத்தின் கிளைகள்தானே! இந்த நம்பிக்கையின் மூல வேர் இந்தச் சிவ லிங்கம்தான்'' என்று அரசமரத்தடியில் இருந்த சிவலிங்கத்தை

யும் நாகப்பிரதிஷ்டைகளையும் காட்டினார் குருக்கள். அங்கு பக்கத்திலிருந்த நாகலிங்க மரத்தின் மலர்கள் சரம்சரமாய் அவற்றின் மீது சொரிந்து கொண்டிருந்தன.

''அப்புறம் என்ன வேணும்? இந்த ஊர்க் கோயிலைப் பத்தியா?... எந்தச் சோழனோ? ஒரு சோழன் காலத்திலே கட்டின கோயில் இது. காலடியிலே பிறந்து கைலாச சிகரம் தொட்டு இந்த தேசத்தின் எட்டுத் திசைகளிலும் சிவலிங்கத்தையே அரணமைத்தாரே அந்த ஆதிசங்கரர்... அவரே பிரதிஷ்டை செய்த லிங்கம்... அப்படீன்னு ஒரு ஐதீகம். இந்தக் கலியுகத்திலே இதை அபிஷேகம் பண்ணிண்டு, அர்ச்சனை செய்துண்டு இருக்கிற மகா பாக்கியம் நேக்குக் கிடைச்சிருக்கு. இந்த ஆசாரிய சுவாமிகள் அந்தக் காலத்திலே இங்கெல்லாம் வளைய வந்துண்டிருப்பார். வேதபாடசாலையிலோ, வீட்டிலேயோ இல்லைன்னா இதோ நீங்க உட்கார்ந்திருக்கேளே இந்த அரச மரத்தடியிலே இதே இடத்திலே பார்க்கலாம்'' என்றதும் அந்த மேடையில் உட்கார்ந்திருந்த காமராக்காரன் ஏதோ அபசாரம் செய்துவிட்டவன் போல் எழுந்து விலகி நின்றான். அப்புறம் இன்னும் கொஞ்சம் பின்னால் தள்ளிவந்து நின்றுகொண்டு அந்த இடத்தைப் படம் பிடித்துக் கொள்வதற்காக காமராவின்மூலம் குறிபார்த்தான். அரசமர மேடையும், நிழலும், நாகலிங்க மலர்களும், பின்னால் சோழனின் கிரீடம்போல் உயர்ந்து நிற்கும் கோயில் கோபுரமும் காமராவின் ஊடே ஒரு கனவுபோல காட்சிகளாய் விரிந்து கொண்டேபோயிற்று...

சங்கரன் அந்த நதிக்கரையில், அரசமரத்தடியில் இறைந்து கிடக்கும் நாகலிங்க மலர்களின் நடுவே அமர்ந்து சூரியாஸ்தமனத்தையும், ஆற்றையும், தூரத்தே தெரியும் பறைச்சேரியையும் சுடுகாட்டையும், - சுடுகாட்டுக்கு வழிகாட்டும் மூங்கில் பாலத்தையும் பார்த்துக் கொண்டிருந்தான். இந்தப் பிரபஞ்சம் சார்ந்த எல்லாவற்றிலும் அவன் பிரம்மத்தையே தரிசனம் செய்து கொண்டிருந்தான்.

சங்கராபரணம் என்கிற இந்த ஆறு அக்காலத்தில் ஒரு ஜீவநதியாக ஓடிக்கொண்டிருந்தது. ஒரு நாகரிகத்தின் உயிரோட்டம் மாதிரி இந்த நதியில் எப்போதும் நீரோட்டம் இருந்தது. கோடை காலத்தில்கூட அகன்ற மார்பில் கிடக்கும் யக்ஞோபவீதம் மாதிரி பளிங்குபோல் தண்ணீர் ஏதோ ஒரு ஓரத்தில் சலசலத்து ஓடிக்கொண்டிருந்தது.

ஆற்றங்கரைப் படித்துறையைத் தழுவிக்கொண்டு எப்போதும் நீர் பெருகி ஓடும். இந்தப் படித்துறையில் அக்ரகாரத்து அந்தணர்கள் மட்டுமே நீராடுவார்கள். மரத்தடியில் உள்ள விக்ரகங்களுக்குக் காற்றடிக்கிறபோதெல்லாம் புஷ்பார்ச்சனை சொரியும்; அந்தணர்கள் குளிக்க வருகிறபோதெல்லாம் மந்திரங்களும், ஸ்தோத்திரமும் காலையும் மாலையும் இங்கு கேட்டுக் கொண்டேயிருக்கும். படித்துறையிலிருந்து மேலேறி, சில அடிகள் நடந்து ஈரக்கால் உலர்வதற்கு முன்பு எட்டிவிடும் அக்கிரகாரம். எண்ணி எட்டு வீடுகள், திண்ணைகளிலெல்லாம் செம்மண் கோடு

களால் கரைகட்டி இடப்பட்ட மாக்கோலம் வெண்மையாய் ஜ்வலிக்கும். வீதியில் நடப்பவர்களுக்கு நடுவில் வழிவிட்டு இரண்டு புறமும் சாணம் தெளித்துப் போடப்பட்டிருக்கும் பொடிக்கோலம் பொழுதெல்லாம் அழியாது. சக்கரம் உடைய வாகனதிகள் அக்கிரகாரத்துக்குள் வராது. அக்கிரகாரத்தின் மறுமுனையில் சிவன் கோயில் கோபுரக் கலசம் பொன்னுக மின்னும். நந்தியும், துவஜஸ்தம்பமும் இடைமறிக்காமல் இருந்தால் ஆற்றங்கரைப் படியேறிய உடன் லிங்க தரிசனமே கிட்டும். சதா சந்தனக் காப்பில் குளிர்ந்திருக்கும் அந்த லிங்கத்துக்குச் சங்கரலிங்கேஸ்வரர் என்று ஸ்தலபுராணம் திருநாமம் மொழிகிறது. கோயிலின் பின்னுலும் மற்ற மூன்று புறத்திலும் வேளாளர், கம்மாளர், வாணியர், சேணியர், குயவர் தெருக்கள் ஒன்றிலிருந்து ஒன்ருய் வாழைப் பூ உரித்த மாதிரி தொடர்ந்து ஒரு பிறைபோல் வளைந்து மேற்குப் புறமாய் வந்து ஆற்றைத் தொடும். அக்கிரகாரத்துக்கும் கோயிலுக்கும் நடுவே மைதானம் மாதிரி ஓர் இடைவெளி, அதன் இருபுறமும் கோட்டை மாதிரி தூண்களுடைய இரண்டு கட்டிடங்கள். ஒன்று கோயில் பரிபாலனம் செய்யும் அலுவலகம். இன்னென்று சங்கர மடம். பிராமணச் சிறுவர்கள் வேத அத்யயனம் செய்யும் அந்தப் பாடசாலையிலிருந்து எழும் தேவ பாஷையின் நாதம் இந்த நாகரிகத்தின் ஆதார சுருதியாக நாளெல்லாம் ரீங்காரம் செய்யும். கோயிலுக்கு மானியமாக ஏராளமான செல்வாதாரம் இருந்தது. சங்கரபுர சர்வமான்ய அக்கிரகாரத்தைச் சேர்ந்தவர்களுக்கு இந்தக் கோயிலும், மடமும், வேத கோஷமும் அதனுல் செழிக்கும் லோக க்ஷேமமும் தவிர வேறு செல்வங்கள் எதுவும் அக்காலத்தில் வேண்டியிருக்கவில்லை. காலம் தவருது பூஜை செய்வதையும், நாள் தவருது வேதம் ஓதுவதையும் குலதர்மமாகவும், லௌகிக கர்மமாகவும் அந்த அக்கிரகாரத்தைச் சேர்ந்த அந்தணர்கள் நம்பி வாழ்ந்து கொண்டிருந்தனர்.

மகாலிங்க ஐயர் இவ்வூர் அந்தணர்களாலும் பிற குலத்தவராலும் ஒரு ஜனத்தலைவர்போல் மிக சிரேஷ்டராக மதிக்கப்பட்டிருந்தார். அவரது தம்பி சதாசிவ ஐயருக்கு, பன்னிரண்டு வயதிலேயே உபநயனம், விவாகம் எல்லாம் நடந்தேறியிருந்தபடியால் அவர் ஆங்கிலக் கல்விக்காக அருகில் உள்ள நகரத்திற்குப் பிரவேசம் செய்த காலத்திலேயே கிரகஸ்தராகியிருந்தார். அவர் முதலாண்டு பரீட்சை எழுதும்போதே அவர் மனைவி வேதவல்லி ஒரு பெண் மகவைத் தந்து தொடர்ந்து நோயாளியாய் இருந்தாள். குழந்தை பிறந்த நேரத்தில் சதாசிவ ஐயர் ரகசியமாகப் படித்துக் கொண்டிருந்த ஒரு புத்தகத்தில் கிடைத்த ஒரு பாடல் அவர் மனசில் சதா மந்திரம்போல் ஒலித்துக் கொண்டிருந்தது.

'இதந்தரு மனையின் நீங்கி இடர்மிகு சிறைப் பட்டாலும்
பதம்,திரு இரண்டும்மாறிப் பழிமிகுந்து இழிவுற்ருலும்
விதந்தரு கோடிஇன்னல் விளைந்தெனை அழித்திட்டாலும்
சுதந்திரதேவி நின்னைத் தொழுதிடல் மறக்கிலேனே'

பெண் குழந்தைக்கு சுதந்திரதேவி என்று அவர் பெயர் சூட்டினர். தமையனர் மகாலிங்க ஐயருக்கு அந்தப் பெயரும், தம்பியின் போக்கும் கொஞ்சம் விசித்திரமாகப் பட்டது. குழந்தையை எல்லாரும் தேவி என்று அழைத்தனர்.

மடத்தில் வேதாத்யயனம் செய்து கொண்டிருக்கும் சங்கரன் சித்தப்பாவைப்போல் ஆங்கிலப் பள்ளிக்குச் செல்லத் தனக்கு விருப்பம் இல்லே என்பதனைத் தாயிடம் தெரிவித்து இருந்தான் என்பதைக் கேட்க மகாலிங்க ஐயருக்கு மனம் சற்று ஆறுதலா யிருந்தது.

எனினும் சில சமயங்களில் சித்தப்பாவிடம் சங்கரன் ஆங்கிலப் பாடம் கற்றுக்கொண்டான். சங்கரனுக்குக் கற்றுத் தருவதில் சதாசிவ ஐயருக்கு ஒரு தனி ஆனந்தம் இருந்தது. தான் ஒரு வருஷத்தில் கற்றதை இவனுக்கு ஒருசில மாதங்களில் கற்றுக் கொடுக்க முடிந்தது தனது திறமையினுலா அல்லது சங்கரனின் அதீத ஞானத்தினுலா என்ற வியப்பில் கிட்டுகிற ஆனந்தம் அது.

மகாலிங்க ஐயர் மகனின் ஆங்கில அறிவை அடிக்கடி சோதித்துத் தானும் அறிந்து கொள்வார். ஒருநாள் தமது தம்பி நகரத்திலிருந்து கொண்டு வந்திருந்த ஒரு ஆங்கில சஞ்சிகையை சங்கரனிடம் கொடுத்து அதன் தலைப்பை வாசிக்கச் சொன்னுர்.

''ஹரிஜன்'' என்று பிரகடனம் செய்வதுபோல் அந்தப் பத்திரிகையின் பெயரை உச்சரித்தான் சங்கரன். உள்ளேயிருந்து, மேல் துண்டால் இரண்டு தோள்களையும் மூடிக் கைகளைக் கட்டிக் கொண்டு வெளியில் வந்த சதாசிவ ஐயர் அந்தப் பெயருக்குப் புதுமையான விளக்கங்களைச் சொன்னுர். காந்தி என்கிற ஒரு மனிதரைப் பற்றி வெகுநேரம் புகழ்ந்து பேசினுர். அந்தப் புகழ்ச்சி காந்தியைத் தவிர வேறு ஏதேனும் ஒரு சக்தியை நம்புகிறவர் களுக்கு மனத்துள் ஒரு கலக்கத்தையும், பொறுமையையும் கூட ஏற்படுத்தும் அளவுக்கு இருந்தது. அவரை ஒரு மகாத்மா, ஒரு அவதார புருஷர் என்றெல்லாம் சதாசிவ ஐயர் வருணிப் பதைக் கேட்கக் கேட்க அந்த காந்தி என்கிற நபர் ஒரு அதிசய மனிதர்தான் என்று மகாலிங்க ஐயருக்கு மனத்துள் ஒரு உடன் பாடும் ஏற்பட்டது.

அப்பாவும் சித்தப்பாவும் பேசிக்கொண்டிருந்த அந்த நேரத் தில் சங்கரன் அந்தப் பத்திரிகையில் உள்ள விஷயங்களில் ஆழ்ந்து மூழ்கிப் போனுன். அது அவனைப் பகலெல்லாம் யோசிக்க வைத்தது. இரவெல்லாம் படுக்கையில் தூக்கமின்றிப் புரள வைத்தது. ஆனுலும் அதில் படித்தறிந்த விஷயங்கள் குறித்து எவரிடமும் வாய்விட்டு எதையும் பேச அவனுக்குத் தைரியம் வர வில்லை. அந்த உண்மைகள் மிகத் தெளிவாகப் புரிந்ததனுல் ஒரு சந்தேக விளக்கம் குறித்த சம்பாஷணைகூட அவனுக்கு அவசிய மாய் இருக்கவில்லை.

அந்த வருஷம் சித்தப்பா பரீட்சை எழுதாமல் நகரத்து இளைஞர்கள் சிலரோடு சேர்ந்து தேச சேவையில் ஈடுபட்டிருக்கிறுர் என்கிற விஷயத்தை முதலில் அறிந்து கொண்டவன் சங்கரன் தான். சதாசிவம் ஒரு நாள் காந்திக் குல்லாயோடு கோயிலுக்கு முன்னுல் உள்ள திடலில், 'வந்தே மாதரம்' என்ற தேவநாகரி எழுத்துக்கள் பதித்த பதாகையின்கீழ் நின்று பிரசங்கம் செய்தார்.

மகாலிங்க ஐயருக்கு மறுபடியும் அது ஒரு விசித்திர மாகத்தான் பட்டது. ஆனுல் பிரசங்கம் போகிற போக்கில் பெரிய விபரீதம் விளையப்போகிறதென்று ஏதோ ஒரு பயம்

அவரை மெல்ல மெல்லக் கவ்வியது. அந்தப் பயம் தன் சகோதரனுக்கு ஏதேனும் சித்த பிரமை ஏற்பட்டு விட்டதோ என்ற எண்ணத்தில்தான் முதலில் பிறந்தது. ஆனால் சதாசிவம் எடுத்து ஓதுகிற வேதப் பிரமாணங்களையும், தர்க்க நியாயங்களையும் கேட்க கேட்கத் தனக்குத்தான் சித்த பிரமை ஏற்படுகிறதோ என்ற சந்தேகத்திலும், ஏதோ நேரக்கூடாதது நேர்ந்துவிடப் போகிறது என்ற திகிலிலும் புத்தி குழம்பிற்று. பக்கத்திலிருந்த சங்கரனை எங்கும் சூழ்ந்து வருகிற இந்த சக்தி கவர்ந்துவிடக்கூடாதே என்கிற பயத்துடன் இறுகத் தழுவிக்கொண்டார்.

பிரசங்கத்தைக் கவனித்துக் கொண்டிருந்த மகனின் முகத்தைப் பார்த்தார். தந்தையின் மனப்படபடப்பை சாந்தப் படுத்துவதுபோல் அவன் பார்த்த பார்வை அவருக்கு ஆறுதலாக இருந்தது. இதையெல்லாம் முன்கூட்டியே அறிந்துதானே இவன் தான் ஆங்கிலம் படிக்கப் போகமாட்டேன் என்று மறுத்தான் என்ற நினைப்பில் ஒரு நம்பிக்கையும் அதைத் தொடர்ந்து சிறிதே மன அமைதியும் பிறந்தது. 'ஆமாம், எல்லாம் இந்த இங்கிலீஷ் படிப்பால் வந்த வினை' என்று அவர் மனம் முணுமுணுத்ததை சங்கரன் உணர்ந்தான். அவன் எதையும் ஏற்கவும் இல்லை, மறுக்கவும் இல்லை. நிகழ்கின்ற நிகழ்ச்சிகளுக்கு ஒரு சாட்சியாய் நின்றான்.

பிரசங்கம் முடிந்ததும் திடலில் கூடியிருந்த ஜனத்திரள் கலைந்தபொழுது அர்ச்சகர் அப்பைய குருக்கள் ஆக்ரோஷமாகப் பெருங்குரல் எடுத்து சதாசிவத்தின் பேச்சை மறுத்தும், கண்டனம் செய்தும் விவாதித்துக் கொண்டு திரும்பினர்.

''பெரிய புராணத்திலேருந்து திருநாளைப்போவாரையும், ஆழ்வார்கள் சரித்திரத்திலேருந்து பாணாழ்வாரையும் மேற்கோள் காட்றச்சே நேக்குக் கண்ணுலே ஜலம் ததும்பிடுத்து...'' என்றார் மகாலிங்க ஐயர்.

''அதெல்லாம் சரிதான் ஓய், அவன் சொன்னதைத் திருப்பி சொல்லக் கூட... நாக்குக் கூசறது! அவாளை மாதிரி இந்தக் கலிகாலத்திலே இந்தச் சேரிக் கூட்டத்திலே ஒருத்தனைக் காட்டச் சொல்லுங்களேன்... சும்மா வாப் புளிச்சதோ, மாங்காப் புளிச்ச தோன்னு பேசறத்துக்கென்ன? என்னைக் கேட்டா, இந்த மாதிரி இந்தச் சேரிக் கூட்டத்தையெல்லாம் கோயில்லே கொண்டுவந்து விடணும்னு அந்தக் காந்தி சொல்லியே இருக்க மாட்டார்னு தோண்றது... இந்தச் சதாசிவ ஐயர் இங்கிலீஷ்பாஷை மோகத்திலே ஏதோ அனுசாரங்களைக் கத்துண்டு வந்து பேத்தறது; இதெல்லாம் நடக்கிற காரியமா?...''

சதாசிவம் கூட்டம் முடிந்ததும் வெளியூரிலிருந்து வந்த சில காந்தியக் கூட்டாளிகளுடன் வேளாளத் தெருப்பக்கம் போனார். அங்குள்ள ஒரு வீட்டில் அந்த வெளியூர் தொண்டர்களுக்கு இரவு போஜனத்திற்கு ஏற்பாடாகியிருந்தது. சதாசிவ ஐயர் அந்த போஜனத்தில் கலந்துகொண்டு வாழைப்பழங்களும் பாலும் மட்டும் சாப்பிட்டார்.

அன்று இரவு முழுவதும் அந்த வெளியூர் தொண்டர்களோடு வேளாளர் தெருவில் ஒரு வீட்டுத் திண்ணையில் தேசம் குறித்த பல விவாதங்களில் பொழுது கழிந்தது சதாசிவ ஐயருக்கு. விவாதமும் ஓயவில்லை; அவர்களுக்கு உறக்கமும் வரவில்லை. கோபுர சிகரத்துக்குப் பின்னால் வெள்ளி முளைத்திருப்பதைப் பார்த்துப் பொழுது விடிந்துவிட்டது என்றும், தான் இரவு வீட்டுக்குச் சாப்பிடப் போகவில்லை என்றும், மன்னி காத்திருந்திருப்பாளே என்றும், மனைவியின் உடம்பு எப்படி இருக்கிறதோ என்றும் ஒவ்வொன்றாக அவருக்குப் பிரக்ஞைகள் ஏற்படலாயின. 'பிரசங்கம் முடிந்ததும் ஒரு நடை வீட்டுக்குப் போய்ச் சொல்லிவிட்டு வந்திருக்கலாம்' என்று நினைத்துக்கொண்டார். விடிகிற வேளையில் அந்த நண்பர்கள் திண்ணையின் மீதே சற்றுக் கண் அயர்ந்தார்கள். சுவரோரமாக, புகைபடிந்த சிம்னி விளக்கின் திரியைக் குறைத்து அவர்கள் சிறிது தூங்கட்டும் என்று அரவம் இல்லாமல் சதாசிவ ஐயர் மட்டும் இறங்கி வேளாளர் தெருநெடுக நடந்தார். மறுபடியும் சுயநினைவு அற்று — வீடு, தமையனார், மன்னி, நோயாளி மனைவி எல்லாம் மனசில் தேய்ந்து மறைய 'செய் அல்லது செத்து மடி' என்ற வாசகமும் காந்தியின் நினைவும், இரவெல்லாம் அது குறித்து அந்த நண்பர்கள் பேசிய பேச்சுக்களும் அவர் சித்தத்தில் கவிந்தன. அக்ரகாரத்துப் பக்கம் போகாமலேயே வேறுபுறமாய் ஆற்றங்கரையை வந்து அடைந்தார் சதாசிவம்.

படித்துறையில் தூரத்தில் தமையனார் வேட்டி துவைத்துக் கொண்டிருப்பதைப் பார்த்தார். இவர் படித்துறைக்குப் போன வேளையில் மகாலிங்க ஐயர் ஸ்நானம் முடித்து சூரிய நமஸ்காரம் செய்து கொண்டிருந்தார். அவரது கிரியைகள் யாவும் ஒரு பழக்கத்தால் நிகழ்ந்தனவேயல்லாமல் அவரது நினைவு முழுவதையும் நேற்று மாலை அவரது தம்பி நிகழ்த்திய பிரசங்கத்தின் வாசகங்கள் திடீர் திடீரென்று எழுந்து கவிந்து புலன்களைத் தாக்கியவாறே இருந்தன.

ஸ்நானம், சூரிய நமஸ்காரம், ஜபதபம் எல்லாவற்றையும் ஒரு அஷ்டாவதானி மாதிரி நிறைவேற்றிவிட்டு ஈரவேஷ்டியைத் தலைக்குமேல் பிடித்துக் காற்றில் உலர்த்தியவாறு சதாசிவம் குளித்து வரும்வரை நாகலிங்க மரத்தடியில் காத்து நின்றார் தமையனார். சதாசிவ ஐயரும் தமையனாரோடு ஒரு சம்பாஷணையைத் தவிர்க்க விரும்புகிறவர்போல் நெடுநேரம் சூரிய நமஸ்காரம் செய்து கொண்டிருந்தார்.

இந்த அனுஷ்டானங்களிலெல்லாம் இவனுக்கு இன்னும் நம்பிக்கை இருக்கிற தென்பதில் தமையனாருக்குச் சற்றுமனம் குதூகலப் பட்டது. இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டபோது மகாலிங்க ஐயர் உடனே கேட்டார்: ''நேற்று நீ என்ன அப்படிப் பேசினாய்?''

தமையனாரும் தம் பிரசங்கத்தை வந்து கேட்டிருப்பார் என்கிற விஷயம் இப்போதுதான் நன்றாக உறைத்தது சதாசிவத்துக்கு. அவர் கேள்விக்குப் பதிலொன்றும் சொல்லாமல் அவரே மேலும் பேசட்டும் என்று கொஞ்சம் மௌனமாயிருந்தார். தமையனார் குரல் தழுதழுக்க இரண்டு கைகளையும் தம்பியின் முன்னால் நீட்டி, ''நாஸ்திகாள்கூடத் தேவலை... உனக்குப் புத்தி

கெட்டுப் போச்சோடா? நிஜத்தை சொல்லு, அந்த மகாத்மாவா இப்படியெல்லாம் சொன்னுர்? யார் சொல்லியிருந்தாலும் ஏதாவது எங்கேயானும் நடக்கட்டும், இந்த சங்கரபுரத்திலே அதெல்லாம் வேண்டாம்... உன்னுடை சிநேகிதாளண்ட நீ கொஞ்சம் நல்ல புத்தி சொல்லப்படாதோ? எங்க ஊர் சேரியிலே யாரும் சிவலிங்க தரிசனம் பண்ணணும்னு துடியாத் துடிக்கலே.. சும்மா இருக்கிற சங்கை நீங்க யாரும் ஊதிக் கெடுக்க வேண்டாம்னு சொல்லவேண்டிய பொறுப்பு இல்லையோ நோக்கு?...'' என்று பேசிக்கொண்டே இருவரும் அக்ரகாரத்துக்குள் நுழைந்தார்கள். வீடு வருகிற வரை தெருவில் இது குறித்து ஏதும் பேசாமல் ஈஸ்வர ஸ்லோகங்களை மனத்துள் முனுகியவாறு நடந்தனர். வாசலில் தேவி பாண்டி விளையாடிக் கொண்டிருந்தாள். சங்கரன் திண்ணையில் நின்று ஈரக்குடுமியைத் தோள்வழியே வழித்து ஈரத்தைப் பிழிந்து விட்டுக் கொண்டிருந்தான். அப்பாவும் சித்தப்பாவும் பேசியிருப்பார்கள் என்று அவனால் யூகிக்க முடிந்தது.

இதற்குள்ளாக அக்ரகாரத்தில் சதாசிவ ஐயரைப்பற்றி விஷயம் வேறுவிதமாகப் பரவியிருந்தது. நேற்று இரவு அவர் வீட்டுக்கே வராமல் ஆசாரங் கெட்டவர்களோடு சமதையாக உட்கார்ந்து போஜனம் பண்ணினுராம். வேண்டுமென்றே பெரியவரின் பேரைக் கெடுக்க இப்படியெல்லாம் செய்கிருராம். இந்த விவரங்கள் ஐயர் அவர்களுக்குத் தெரிவதற்கு முன்னுல் மன்னிக்கும், சதாசிவத்தின் மனைவிக்கும் தெரிந்திருந்தது. நோய்வாய்ப்பட்டிருந்த மனைவி நேற்றுப் பகற் பொழுதுக்குப் போய் ஒரு நாள் கழித்து வீடு திரும்பியிருக்கிற புருஷனைப் பார்த்ததும் ஒன்றும் சொல்லாமல் அழுதாள். ஐயருக்கு ஒன்றும் புரிய வில்லை. ''இதோ பார் வேதம், உன் உடம்பு இருக்கிற நிலையில் மனசை வேற கஷ்டப் படுத்திண்டு, அழாதே...இப்ப என்ன ஆயிடுத்தாம்?...'' என்று ஏதோ சமாதானம் சொன்னுர். ''உங்களுக்கு ஏனே இப்படியெல்லாம்பேரெடுக்க வேண்டுமென்று தலையெழுத்து! நேக்குத்



தெரியும்... நீங்க ஒண்ணும் ஆசாரம் கெட்டுப்போக மாட்டேள். உங்க மொகம் ரொம்ப வாடியிருக்கு... ராத்திரி ஏதாவது சாப் பிட்டேளா?'' என்று தனக்கு அவர் மீது இருக்கும் நம்பிக்கையை யும் அன்பையும் காட்டிக்கொண்டு அழுதாள் வேதம்.

'எல்லாம் கிடக்க இவளுக்கிருக்கிற கவலையைப் பாரேன்' என்று சதாசிவம் மனத்துள் சிரித்துக் கொண்டாலும் அவளது கண்ணீரிலிருந்து தன்னைப் பற்றி இவள் ஏதோ தவருகக் கேள்விப் பட்டிருக்கிருள் என்று யூகித்துக் கொண்டார்.

''ராத்திரி எல்லாம் கண் முழிக்கிறவாளுக்குச் சாப்பாடு வேற வேண்டியிருக்குமாக்கும்! ஏதோ ரெண்டு பழத்தைச் சாப் பிட்டோம்'' என்று அவர் சொல்லிக் கொண்டிருந்தது கூடத்து ஊஞ்சலில் உட்கார்ந்திருந்த தமையனுருக்குச் சிறிது சமா தானத்தை அளித்தது. ஆனுல் தொடர்ந்து சதாசிவம் சொல்லிக் கொண்டிருந்ததைக் கேட்டபோது...

...''அப்படியே அவாளோடே சாப்பிட்டிருந்தால்தான் என்ன வாம்? நேக்கு இந்த ஆசாரத்திலெல்லாம் இருந்த நம்பிக்கை போயிடுத்து... எனக்குப் போனுப் போறுமா? அவாளுக்கிருக்கே.. அதனுலதான் என்னைப் பொறுத்தவரைக்கும் ஐயர், சாஸ்திரிங்கற பட்டத்தையெல்லாம் விட்டுட்டாலும், ஊர்லே இருக்கறவா இப்ப வும் என்னை ஐயரேன்னுதான் கூப்படறு... நேத்திக்கு ராத்திரிகூட என்னை என்னமோ தீண்டத்தகாதவன் மாதிரி ஒதுக்கிவச்சு ஒரு சீப்புப் பழமும் ஒரு செம்பிலே பாலும் கொண்டுவந்து கொடுத்தா. மூங்கில்குடிப் பறைச்சேரியிலே நாங்க ஒரு ஆஸ்ரமம் நடத்தப் போறேம். ஹரிஜனக் கொழந்தைகளையெல்லாம் சேர்த்து அவாளுக்கு ஸம்ஸ்கிருதம், ஆங்கிலம், தமிழ் எல்லாக் கல்வியும் கத்துத் தரப்போறேம். கமிட்டியிலே என்னைத் தலைவராப் போட்டிருக்கா...'' என்று ரொம்பப் பெருமையாகச் சொல் லிக் கொண்டார் சதாசிவ ஐயர்.



மின்சாரத்தின் அதிர்ச்சியைக்கூட அறியாத அந்தக் கிராமத்து சநாதனி யாகிய மகாலிங்க ஐயருக்குத் தம்பியின் போக்கால் ஏற்பட்ட அதிர்ச்சியில் நெற்றியெல்லாம் வியர்த்து உடல் நடுங்கிக்கொண்டிருந்தது. அவனேடு தர்க்கம் செய்து இது விஷயத்தில்தான் ஜெயிக்க முடியாது. தானென்ன? இந்த ஊரே ஜெயிக்க முடியாதோ? என்று எண்ணியபோது இந்த விபரீதத்தி லிருந்து எப்படி மீளப்போகிறேம் என்று மலைப்பாய் இருந்தது. இப்பொ ழுதே ஊரில் அபவாதம் கிளம்பி விட் டது. நாளைக்கு சநாதன தர்மத்தில் நம்பிக்கை கொண்ட நாலு பிராமணர் கள் ஒன்றுகூடி இதுபற்றி விசாரிக்க நேர்ந்தால் தானும் தலைகுனிந்து நிற்க நேரும். அதற்கும் மேல் இந்த சதா சிவத்தை ஏதாவது ஜாதிக்கட்டுமானம் என்று தள்ளி வைத்துவிட்டால், கலி யாண வயதில் ஒரு பெண் குழந்தை வேறு இருக்கிறதே.' என்று கலங்கினர்.

ஊஞ்சலில் உட்கார்ந்திருந்தவாறே அவர் தம்மையறியாமல் இவ்விதம் கூவினர்: ''என்ன விநாசகாலமோ நோக்கு இந்த விபரீத புத்தி?... இதனுல் நமது ஜாதிக்கே பெரிய தோஷம் ஏற்படப் போகிறது. இந்த ஊரே அழியப் போகிறது. இதோ பார் சதாசிவம், என் உயிர் உள்ளவரை நீ சொல்லுகிற இந்த அனுசார காரியமெல்லாம் இங்கே நடக்காது... கோயில்வாசலில் நான் குறுக்காய்ப் படுப்பேன். உன் மூங்கில்குடி நந்தனுர்களும், பாணுழ்வார்களும் என் தேகத்தின் மீது ஏறி நடந்து போகட்டும். உனக்கும் உன் காந்திக்கும் அப்போது திருப்தியாய் இருக்குமோன்னே?'' என்று படபடவென்று கண்களில் கண்ணீர் வழியப் பேசித் தீர்த்தார் மகாலிங்க ஐயர்.

அவர் கண்களில் ஜலம் பெருகுவதைக் கண்ட அம்மாவுக்குத் துயரம் தாங்க முடியவில்லே. பூஜையறைக்குப் போய், ''ஈஸ்வரா இதெல்லாம் உன் விளேயாட்டா?'' என்று முறையிட்டு அவளும் அழுதாள். வேதவல்லி நோயின் உக்ரத்தாலும், மன உளேச்சலாலும் என்ன நடக்கிறது என்று ஸ்மரணேயில்லாமல் மயங்கிக் கிடந்தாள். குழந்தை தேவி? அதற்கென்ன ஆனந்தம்தான். அக்ரகாரத்துத் தெரு மண்ணே, பாவாடை நிறைய வழிய வழிய அள்ளிக்கொண்டு வந்து திண்ணேயில் கொட்டிக் கொண்டிருந்தது. சங்கரன் எல்லாவற்றுக்கும் சாட்சியாய் நின்றுகொண்டிருந்தான். சதாசிவ ஐயருக்கு இந்த அற்ப விஷயங்கள் எதுவும் மனத்தைத் தைக்கவில்லே. மார்பின்மீது கட்டிய கைகளுடன் சேரியில் ஆரம்பிக்கவிருக்கும் ஆசிரமத்துப் பணிகள் குறித்துத் தீவிரமாய் யோசித்துக் கொண்டிருந்தார்.

ஒரு செயல் எந்த மாற்றமும் இல்லாமல் தொடர்ந்து செய்யப்பட்டுக் கொண்டு வருமேயானுல் அது ஒரு சடங்காகிப் போகிறது. ஒரு செயலிலிருந்து இன்னெரு செயல் உருவாகத் தகுந்த செயல் திறமுடைய ஓர் ஆற்றலே ஓர் இயக்கமாகப் பரிணமிக்கிறது. சதாசிவம் காந்தியின் வழிகாட்டலில் ஈடுபாடு கொண்ட ஒரு செயல் சடங்கன்று. சதாசிவம் காந்திக்குல்லாய் அணிந்ததும், சுடலேக்கரைக்குப் போகும்போது மட்டும் கடக்கின்ற, அந்த மூங்கில் பாலத்தின் மீது ஏதோ புனித யாத்திரை போவதுபோல் சில வேளாளத்தெரு பையன்களேயும் கூட்டிக் கொண்டு சூரியோதயத்திற்குப் போய் சூரியன் அஸ்தமிக்கிறவரை அவர் சேரியில் அந்த மக்களுடன் உழலுவதும், ஓர் அர்த்தமுள்ள இயக்கத்தின், ஆற்றல் வலிமை ஆகும்.

அப்போதும்கூட சேரியிலிருந்து திரும்பி வருகிறபொழுது ஆற்றில் ஸ்நானம் செய்து அந்தி ஜெபங்களே எல்லாம் குறையில்லாமல் செய்வார் சதாசிவம். ஏதோவொரு கடமைக்காக, இந்த வீட்டிலுள்ளவர்களின் திருப்திக்காக இரவு ஒருவேளே போஜனத்துக்கு மட்டும் அவர் அக்ரகாரத்துக்குள் பிரவேசம் செய்து கொண்டிருந்தார். அந்த மூங்கில் குடியிலேயே, அந்த ஆஸ்ரமத்திலேயே போய் அமர்ந்துவிட வேண்டுமென்கிற ஆசை அவருள் ஒரு லட்சியம்போல் குடிகொண்டு வளர்கிது.

அதற்குரிய வேளை வரவேண்டாமா, என்று காத்திருந்தார் சதாசிவம். சங்கரபுரத்தின் சநாதன தர்மத்துக்கே சாட்சியாய் விளங்கிய மகாலிங்க ஐயரின் தம்பி ஒரு நாள் தலையில் காந்திக் குல்லாயும், மார்பில் மாட்டுத்தோலால் வார் போடப்பட்ட தமுக்கையும் மாட்டிக் கொண்டு திடும்திடும் என ஒரு நாகரிகத்தின் இதயத்திலேயே அடிப்பது மாதிரி ஓசை எழுப்பிக் கொண்டு வந்தார். ஊர்ச் சிறுவர்களெல்லாம் வேடிக்கைப் பார்க்கக் கோயில் மைதானத்தில் கூடியிருந்தனர்.

''வருகிற — மகா சிவராத்திரி அன்று காலை ஒன்பது மணிக்கு மூங்கில்குடியைச் சேர்ந்த ஹரிஜன மகாஜனங்கள் சங்கர லிங்கேஸ்வரர் கோயிலில் ஆலயப் பிரவேசம் செய்கிறார்கள். எமது தேசத்தையும், ஹிந்து மதத்தையும் சார்ந்த பீடை ஒழிந்தது. அவர்களை வாழ்த்தி வரவேற்க ஹிந்து தேசாபிமானிகளெல்லாம் திரளவேண்டும். டும்...டும் டுடும்டுடும்...'' என்று அவர் தமுக் கடித்துக் கொண்டிருந்தபொழுது மகாலிங்க ஐயர் ஏதோ தன் தம்பி இறந்துவிட்டதுபோல் தலையில் முக்காடிட்டுக் கூடத்து ஊஞ்சல் பலகையில் குப்புறப் படுத்து அழுது கொண்டிருந்தார்.

மகாலிங்க ஐயர் வெளியிலே தலைகாட்டவே இல்லை.

அடிக்கடி வேத பாடசாலைக்கு விடுமுறை. கோயிலின் அடையா நெடுங்கதவம் அடைத்துப் பூட்டப்பட்டிருந்தது. சித்தப்பா மைதானத்தில் நின்று கொட்டி முழக்கிய தமுக்கின் சப்தம் அடிவயிற்றில் இன்னும் ஒலிக்கிறது. சங்கரனைத்தவிர அக்ரகாரத்துப் பையன்களெல்லாம் கோயில் திடலில் குழுமியிருக்கின்றனர். அப்பா அழுது சங்கரன் பார்த்ததே இல்லை. எல்லாவற்றையும் மௌனமாக இருந்து பயின்று அறிந்த ஞானத்தினால் அவனுக்கு அப்பாவின் வருத்தம் புரிந்தும் அதில் பங்கேற்க முடியாமல் இருந்தது. எனினும் அப்பாவின் கண்ணீர் அவன் மனத்தையும் கொஞ்சம் கரைத்தது. ஆனாலும் அழுகை வரவில்லை.

'இந்த தேசத்துக்கும், இந்த ஆரிய ஜாதிக்கும், ஹிந்து சமூகத்துக்கும் ஏற்பட்டிருக்கிற விபத்துகளுக்கெல்லாம் எங்கோ ஒரு தூய பிராமணன் அழுது கண்ணீர் சிந்துவதா பரிகாரம் ஆகிவிடப்போகிறது?' — நாள்தோறும் சித்தப்பா முழக்கும் தமுக்குச் சத்தம் கேட்டுக் கொண்டே இருக்கிறதே...

சங்கரன் வாசற்பக்கம் வந்து திண்ணையில் நின்று தெருக் கோடியில் கோயிலுக்கு முன்னால் திருவிழா மாதிரி ஜனக்கும்பல் சூழ்ந்திருப்பதைப் பார்த்தான். சதாசிவ ஐயர் மார்பில் தொங்குகிற தமுக்குடன் ஒரு மேஜையின்மீது ஏறி நின்றுகொண்டு உரத்த குரலில் பிரசங்கம் வேறு செய்து கொண்டிருந்தார்...அந்த நியாயங்களெல்லாம் சங்கரனுக்குப் புரியாமலில்லை. எனினும் தலையில் வானமே இடிந்து விழுந்ததுமாதிரி அதிர்ந்து உட்கார்ந்திருக்கிறாரே அப்பா அவரது உணர்ச்சிகள் மட்டும் அர்த்தமற்றவையா என்ன? நந்தனாரையும், பாணழ்வாரையும் ஏற்றுக்கொள்கிற, வணங்குகிற, அந்தக் கதையை இந்தச் சித்தப்பா சொல்கிற போது

கண்களில் ஜலம் வழிய உணர்ச்சி மயமாகி மெய்சிலிர்த்துப் போகிற இந்த சநாதன அப்பாவுக்கு உறுத்துகிற அந்த உண்மை ஏன் இந்த சித்தப்பாவுக்குப் புரியாமல் போயிற்று? அப்பாதான் கேட்டாரே...

'நந்தனுரையும் பாணுழ்வாரையும் போல எங்க மூங்கில் குடி சேரியில் உள்ளவா யாரும் தெய்வ தரிசனம் வேணும்னு துடிச்சிண்டு நிக்கலே... அதுமாதிரி எங்கேயானும் இருந்தா அங்கே நடக்கட்டும் இந்த ஆலயப் பிரவேசம்'னு

சித்தப்பா அதுக்கு சிரிச்சார். அதற்குத்தான், இதோ கோயில் மைதானத்தில் நின்று கூட்டம் கூட்டிப் பதில் சொல்லிக் கொண்டிருக்கிறுர் அவர்:

''இவர்கள் என்ன நந்தனுர்களா? பாணுழ்வார்களா? என்று கேட்கப்படுகிறது. இப்படிக் கேட்கும் பெரியோர்களுக்கு எளியோனுகிய என்னுல் பதில் சொல்ல முடியாது. நாங்கள் வணங்கும் தெய்வமாகிய எங்கள் காந்தி இதற்குப் பதில் சொல்லுகிறுர். எந்தச் சகோதரர்களை நீங்கள் பறையர் என்றும், பதிதர்கள் என்றும், சண்டாளர்கள் என்றும் சபிக்கிறீர்களோ அவர்களைத்தான் 'நான் வணங்கும் தெய்வம்' என்று சொல்லுகிறுர் அவர். மேலும் சொல்லுகிறுர்...''

சங்கரன் அவற்றையெல்லாம் அந்த ஹரிஜன் பத்திரிகையில் ஏற்கெனவே படித்திருக்கிறுன். அப்பாவுக்குப் பதில் சொல்லுவதா முக்கியம்? பரம்பரை பரம்பரையாய்க் கட்டிப் பாதுகாத்து வந்த ஒரு நம்பிக்கை, ஒரு சீலம் இவ்விதம் தானடித்த மூப்பாய்ச் சிதறிப்போக விடலாமா? இதற்கென்ன பரிகாரம் தேடமுடியும்? என்று சிந்தித்தவனுய்த் தெருவில் இறங்கி ஆற்றங்கரைப் பக்கமாய் நடந்தான் சங்கரன்.

'சிவராத்திரிக்கு இன்னும் சிலநாட்கள் இருக்கின்றன. ஊர் முழுவதும் தண்டோரா போட்டு அறிவித்த நிகழ்ச்சி அன்று நிச்சயம் நடக்கும். அதன் பிறகு சித்தப்பா ஜாதிப் பிரஷ்டம் செய்யப்படுவார். அவருக்கென்ன? முக்கால் வாழ்க்கை சேரியில் தான். அவர் லட்சியம் அவரைப் பொருத்த வரை முழுமையாகி விடும்... லட்சியம் என்பதே அவ்வளவுதானு?

சங்கரன் குனிந்த தலையோடு மூங்கில் பாலம் வரை நடந்து வந்து விட்டான். சில்லென்று காற்று வீசியது. மேல்துண்டை உதறிப் போர்த்திக்கொண்டு தலை நிமிர்ந்தபோது எதிரே ஆற்றுக் கப்பால் மூங்கில்குடி சேரியில் ஓர் உயர்ந்த கம்பத்தில் காந்திக் கொடி பறந்து கொண்டிருந்தது. அதுதான் சித்தப்பா நடத்தும் பள்ளிக்கூடமோ, ஆஸ்ரமமோ? எதிர் காலத்தில் அவர் இல்லமோ? என்று ஒரு பெருமூச்சுடன் அவன் யோசித்தான். மூங்கில் பாலத்தின் மீது ஒன்றன் பின் ஒன்ருய் வரிசையாய் ஆடுகள் நடந்து கரைகடந்து அந்தப் பக்கம் போய் கொண்டிருந்தன. ஆடுகளை ஓட்டிக் கொண்டு பின்னுல் அவன் வந்தான்.

அவனைப் பார்க்கிற பொழுதெல்லாம் சங்கரனுக்குத் திருக்குறள் நினைவுக்கு வரும். அதற்குக் காரணம் அவன் பெயர் ஆதி. சங்கரன் மனத்தில் 'பகவன் முதற்றே உலகு' என்று அவன் பெயரைத் தொடர்ந்து வருகிற குறளின் அடி ஸ்தோத்திரம்

போல் பிறக்கும். சங்கரன் ஆற்றில் இறங்கி சந்தியாவந்தனம் செய்து முடித்தான். கரை நெடுக ஓடி ஒரு கோடியிலிருந்து இடையில் சிதறி மேய்ந்து கொண்டிருந்த ஆடுகளை ஒன்று திரட்டி மறுகோடிக்கு ஓட்டிக் கொண்டிருந்தான் ஆதி.

ஆதியும், சங்கரனும் ஆத்மார்த்தமான நண்பர்கள். அந்த நட்பு சங்கராபரண நதியின் இந்தக் கரையிலிருக்கும் அக்ரகாரத் துக்கும் அந்தக் கரையிலிருக்கும் மூங்கில் குடிக்கும் ஏற்படும் என்றால் எவர் நம்புவர்? இடையில் இவ்வளவு அகலமாய் இரண்டு கரைகளையும் பிரித்து ஓடுகிறதே நதி? ஊரைப் பிரிக்கிற நதிதான் கரைகளை ஏற்படுத்தி எல்லா வரம்புகளையும் கட்டிப் பாதுகாக்கிறது.

சங்கரனுக்குக் குழந்தைப் பருவத்திலிருந்தே சன்னியாசத் தின் மீது காதல் பிறந்திருந்தது. உண்மையான துறவுக்கு ஏற்ற பருவம் குழந்தைப் பருவமே. அவன் தாய் அவனுக்கு அமுதூட்டும் பருவத்திலேயே உரைத்த கதைகள் அதற்கான உரத்தை அவன் ஆத்மாவுக்கு ஊட்டி போஷித்து வந்திருக் கின்றன. அவன் தந்தை மகாலிங்க ஐயர் ஸம்ஸ்கிருதத்திலும் தமிழிலும் அவனுக்கு வித்தைதான் போதித்தார். கேள்வி கேட் கும் மாணுக்கர்களை அவர் மூன்றும்தர மாணுக்கர்களாக வகை பிரித்து வைத்தார். அநேகமாய் அவருக்குக் கிடைத்த எல்லா மாணுக்கர்களும் அந்தத் தரத்தினர்தாம். சங்கரன் அவரிடம் கேள்வி கேட்டதேயில்லை. ஆரம்பத்தில் சிலகாலம் அவனது அறிவைச் சோதிக்க அவர்தான் கேள்வி கேட்டுக்கொண்டிருந்தார். ஒரு சிறந்த மாணுக்கனை வினு-விடைகள்மூலம் சோதித்துக் கொண்டிருப்பது ஒரு சிறந்த ஆசிரியருக்கு அழகல்ல என்பதை சங்கரனுக்குப் பாடம் சொல்லித் தந்து, தானே பயின்றார்.

பயிற்சியின்போது தனக்கேற்படும் சந்தேகங்களை மறவாமல் குறித்துக் கொண்டு வந்து தாயிடமே கேட்டறிவான் சங்கரன். அம்மா ஞானத்தில் கடல். பொறுமையில் மலை. ஓர் ஐயம் என்று ஏற்பட்டு விட்டால், அது நீங்குகிறவரை ஓராயிரம் கதை களின்மூலம் பலநாட்கள் அதை நினைவுபடுத்தி நினைவுபடுத்திப் பேசுவாள் அம்மா. ஐயம் தீர்கிறவரை விடமாட்டாள்.

சங்கரனை இடுப்பில் வைத்துக்கொண்டு, கிண்ணத்தில் சாதம் பிசைந்து அவனுக்கு ஊட்டுகிற நாள்தொட்டு ஒவ்வொரு கவளத் திற்கும் ஒரு பாட்டுப்பாடி, ஒரு வேடிக்கை காட்டி உலகத்திலுள்ள ஒவ்வொரு பொருளையும் அவனுக்கு அவள் பரிச்சயம் செய்து வைத்துக் கொண்டிருந்தாள்...

'இதோ காக்கா' என்று ஆரம்பித்தாளானல் அது எப்படி ஊரைச் சுத்தம் செய்கிறது என்பதிலிருந்து சனீஸ்வரனின் வாகனம் என்பதுவரை... அதுமட்டுமா? அந்த காகாசுரன் ராம பாணத்தில் ஒரு கண் இழந்த கதை உட்பட, அம்மா மாதிரி அவனுக்கு யார் கதையும், கருத்தும், அதே போதில் வாழ்வின் பொருளும் புரியச் சொல்லியிருக்கிறார்கள்? இப்போதும்கூட அம்மா அவனுக்குச் சாதம் பரிமாறுகிறபொழுதுதான் அவன் தனது சந்தே கங்களைக் கேட்பான். அவள் அவனுக்கு விளக்கம் சொல்லுகிற

பொழுது ஊரின் எல்லேகூடத் தாண்டியறியாத இந்த அம்மா எப்படி உலகெலாம் அளந்து வைத்திருக்கிருள் என்று சங்கரன் வியந்து போவான்.

''அம்மா... மனுஷா, மிருகங்கள், பறவைகள் எல்லாமே செத்துப்போயிண்டே இருக்கே, அது ஏன்? இதுக்கொரு முடிவே இல்லேயா?...'' என்று பால் சாதத்தைப் பிசைந்து கொண்டே கேட்டான் சங்கரன். அம்மா இன்னும் கொஞ்சம் பால் ஊற்றிஞள்:

''நன்ஞ யோசிச்சுப்பார்... மனுஷா, மிருகங்கள், பறவை கள் எல்லாம் செத்துண்டிருக்கறது மட்டுமா தெரியறது?... புதுசு புதுசா பிறந்திண்டும் இருக்கே...''

''அது சரி அம்மா, பிறந்ததெல்லாம் செத்துண்டே இருக்கே...''

சாப்பிடாமல் அவன் சாதத்தைப் பிசைந்துகொண்டே இருந்தான். அம்மா இன்னும் கொஞ்சம் பால் ஊற்றிஞள்.

''உயிர்கள் மறுபடியும் மறுபடியும் பிறந்துண்டே மறுபடியும் மறுபடியும் செத்துண்டே...''

சங்கரன் மனத்தில், 'புனரபி ஜனனம்... புனரபி மரணம்' என்று அப்பா சொல்லிக் கொண்டிருப்பது நினேவுக்கு வந்தது. இப்போது அதற்கு அர்த்தம் நன்ருகத் தெரிந்தது; எனினும் அவன் கேட்டது இது குறித்து அல்ல. அவன் தலேநிமிர்ந்து அம்மாவை விழியுயர்த்திப் பார்த்தான்.

'அம்மா மறுபடியும் நீ என்னேயே பெறுவாயா? நான் உன்னேயே தாயாக அடைவேனு? அல்லாமல் நான் என்ன ஆகிறேன், நீ என்ன ஆகிருய் என்பது குறித்தா நமக்குக் கவலே? நமது இந்த உறவுகள் என்னவாகின்றன? இது மாயையா?' என்று மனத்தில் தோன்றிய எண்ணங்களினுல் அவன் கண்களில் நீர் சுரந்து கலங்கிற்று. கல்வியும் ஞானமும் கடந்த ஒரு பாசம் அவனுள்ளே தவித்தது.

'அம்மா நேக்குப் பயமா இருக்கு' என்று அந்தப் பருவத்துக்குரிய குழந்தைமையோடு அவன் சொல்லுகையில் அவன் கண்களிலிருந்து கண்ணீர் உதிர்ந்தது. அம்மா பதறிப்போனுள். பால் செம்பைத் தரையில் வைத்துப் பக்கத்தில் அமர்ந்து அவனேத் தழுவிக்கொண்டாள்.

அன்றைக்குத்தான் இரவில், நிலாவெளிச்சத்தில் அவள் அவனுக்கு மார்க்கண்டேயன் கதை சொன்னுள்: ''தெய்வ பக்தியால் மரணத்தை வென்று விடலாம். ஜீவன் முக்தராகி சிரஞ்சீவியாய் வாழலாம்... ஈசனே இறுகப் பற்றிக்கொள்வாரை எமன் நெருங்குவதற்கு அஞ்சுவான்...'' என்றெல்லாம் அம்மா சொன்ன கதை அவன் நெஞ்சத்தில் ஆழப் பதிந்தது.

அந்த நதிக்கரையில், அரச மரத்தடியில், நாகலிங்க மலர்களின் நடுவே அமர்ந்து அந்த நதியேபோல் பெருகும் ஆன்மிகப் பிரவாகத்தில் அமிழ்ந்து நாளெல்லாம் போக்குவான் சங்கரன். தூரத்தில் ஆடுகள் மேய்ந்து கொண்டிருக்கும். சில சமயங்களில்

மயானம் புகையும்; தொலைவிலுள்ள சேரியின் பறைமேளம் எப்போதும் முழங்கும்.

இந்தப் பக்கம் சிவன் கோயிலில் சந்தியா கால பூஜைக்கு மணி முழங்குகிறது. எங்கெங்கோ சிதறி மேய்ந்து கொண்டிருந்த ஆடுகளை எல்லாம் ஒன்று திரட்டி மூங்கில் பாலத்தின் மீது விரட்டிக்கொண்டிருக்கிறான் ஆதி. அரசமரத்துக்குப் பின்னால் தனித்து விடப்பட்ட ஆட்டுக்குட்டி சங்கரன் பின்னால் வந்து பரிதாபகரமாக அலறுகிறது. சங்கரனுக்கு அந்த அழகான ஆட்டுக் குட்டியைத் தொட்டுப்பார்க்க வேண்டும்போல் இருக்கிறது. தொட மனம் இருந்தும் கை வரவில்லை. பயமா?... கூச்சம். ஆதி ஆட்டுக் குட்டியின் குரல் கேட்டு அரசமரத்தடியை நோக்கி ஓடி வருகிறான். சங்கரனைப் பார்த்து நட்போடு புன்னகை செய்து அவன் பக்கத்தி லிருந்த ஆட்டுக் குட்டியைக் குழந்தை மாதிரி வாரி மார்போடு அணைத்துக்கொண்டு கொஞ்சுகிறான். தாய் ஆடு மூங்கில் பாலத்தின் மீது நின்றுகொண்டு குரல் கொடுக்கிறது.

இறுதியில் மரணத்திற்குப் பலியாகும் மனிதர்களின் பாச மும், இந்த மனிதர்களுக்குப் பலியாகும் இந்த ஆடுகளின் பாசமும் சங்கரன் மனத்தில் ஓர் விரக்தியை ஏற்படுத்தின.

மூங்கில் பாலம் வரை சென்று ஆட்டுக் குட்டியை அதன் தாயருகே கொண்டுவிட்டான் ஆதி. தாயும் சேயும் குதித்து மந்தை மறுகரையை அடைந்தது. ஆடு மேய்க்கும் பொறுப்பு ஆதியை இத்தோடு விட்டதுபோல் அவன் தலைப்பாகையை அவிழ்த்து உதறிக்கொண்டு தண்ணீரில் இறங்கினான். சங்கரன் ஆசமனம் செய்வதற்கொப்ப அவனும் கைகால் முகம் அலம்பி, இரண்டு கை தண்ணீரை அள்ளிக் குடித்துக் கரையேறினான்.

ஆடுகள் தூரத்தில் பறைச்சேரியை நோக்கிப் போய்க் கொண்டிருந்தன. ஆடுகளின் சொந்தக்காரனான ஆதியின் மாமன் அவற்றைக் கிடையில் அடைப்பான். ஆதி, சங்கரன் இருக்குமிடம் வந்து ஒரு மரியாதையான தூரத்தில் தொறட்டிக் கம்பை ஊன்றி அதன் மீது சாய்ந்தவாறே கைகட்டி பவ்ய மாக நிற்பான். சங்கரன் அவனுக்குத் தான் கற்ற கதைகளை எல்லாம் விவரித்துச் சொல்லுவான். சில சமயங்களில் நேரம் அதிகமாகிவிடும். அப்போது தொறட்டிக் கொம்பைக் தோள்மீது சாய்த்து அதே இடத்தில் குத்துக் காலிட்டு உட்கார்ந்திருப்பான் ஆதி. ஒருவர் முகம் ஒருவருக்குத் தெரியாதவாறு இருள் திரை யிடும். அப்போதும்கூட அவர்கள் பேசிக் கொண்டிருப்பார்கள். விடைபெற்றுக் கொள்ளும்போது இருட்டிலிருந்து ஆதியின் குரல் ஒலிக்கும்: ''கும்பிடறேன் சாமி...'' என்று இருளில் அவன் எழுந்து நிற்கும்போது சங்கரன் மானசீகமாய் அவன் கால்களில் சாஷ்டாங்கமாய் விழுந்து கிடப்பான். தெய்வம் என்றால் அது இந்த ஆதியின் உருவமாகவே கையில் ஒரு தொறட்டிக் கம்புடன் சங்கரனின் உள்ளே தரிசனம் தருகிறது!

அவன் கால்களில் விழ முடிந்ததே தவிர, கை நீட்டி அவனைத் தீண்ட முடிந்ததில்லை சங்கரனுக்கு. அது குறித்து அவன் உள்ளூற மிகவும் வெட்கப்பட்டான். கூசினான்...

அந்த அக்ரகாரத்தில் உள்ள அனைவர்க்கும் இந்த உணர்ச்சி பொதுதான். ஆனால், இது குறித்து ஏற்பட்ட வெட்கமும்

கூச்சமும் சங்கரனுக்கு ஏற்பட்ட அளவுக்கு அவன் சித்தப்பாவுக் குக்கூட ஏற்பட்டிருக்க முடியாது. இந்த ஒதுக்கமும் இதுகுறித்துக் கொண்டகூச்சமும் எவ்வளவு அர்த்தமற்றது என்பதை அனுபவம் சங்கரனுக்கு உணர்த்தியிருந்தது.

ஓ! அந்த அனுபவம்...

ஆதி அந்தச் சேரியில் ஓர் அதியசப் பிறவி. அனாதை. சேரியில் அடிக்கடி வந்து போகும் ஏதோ ஒரு கொள்ளை நோய்க்கு அவன் பெற்றோரைப் பலி கொடுத்திருந்தான். அவன் மாமன் ஆடுகளை வளர்த்ததுபோல் அவனையும் வளர்த்தான். அதனாலேயே அந்த ஆடு மாடுகளோடு அவன் சகோதரபாசம் கொண்டான். அவன் மாமிஸ போஜனமே செய்ததில்லை என்று அறிந்தபோதுதான் சங்கரன் அவன்மீது முதலில் பக்தி செலுத்த ஆரம்பித்தான்...

சதாசிவ ஐயர் சேரியில் ஆரம்பித்து நடத்துகிற காந்திப் பள்ளிக்கூடத்தில் இந்த ஆதி ஒரு முதல்தர மாணாக்கன். இவன் பள்ளிக்கூடம் போவதை இவனது மாமன் முதலில் அனுமதிக்கவே யில்லை. ஒருநாள் சதாசிவ ஐயரே ஆதியின் மாமன் மாரியைப் பார்த்து அவன் மனம் இளகும்படி வேண்டினார். பின்னர் காலையில் ஆடுகளை மேய்ச்சலுக்கு விட்டு மாலை நேரத்தில் மந்தையைக் கொண்டுவந்து விடுவதுடன் மற்ற நேரங்களில், அவன் பள்ளிக் கூடத்திற்குப் போகலாம் என்று தீர்மானமாயிற்று. முன்பெல்லாம் எந்த நேரத்தில் ஆற்றங்கரைக்கு வந்தாலும், 'சாமி' என்று கும்பிட்டவாறு ஓடிவரும் அவனை எதிர்நோக்கி இப்போதெல்லாம் அவனுக்காக சங்கரன் காத்திருக்க வேண்டியிருந்தது. ஆதி, சங்கர னுக்காக மரத்தில் ஏறி நாவற்பழம் உலுக்குவான். கோடை காலத் தில் பனங்காய்ப் பறித்துக் கொண்டுவந்து சீவி நுங்கு எடுத்துத் தரு வான், முந்திரித் தோப்பிலிருந்து மடியில் கட்டிக்கொண்டு வரும் முந்திரிக்கொட்டைகளைத் தீ மூட்டிச் சுட்டுத் தருவான். அவனுக்குக் காட்டிலிருக்கும் பறவைகள், பூச்சிகள் செடி, கொடி, புல், பூண்டு எல்லாமே பரிச்சயம். அவற்றின் பெயர், குணம் அவை சம்பந்தப் பட்ட விளையாட்டு எல்லாவற்றிலும் அவன் ஒரு நிபுணன். ஒரு தடவை அவன் ஒரு மரப் பொந்தில் கை நுழைத்து ஒரு கிளிக் குஞ்சைப் பிடித்தான். சங்கரன் அந்தக் கிளியைக் கையில் வாங்கித் தடவிப் பார்த்திருக்கிறான். அதற்கு பாலும் பழமும் ஊட்டியிருக்கிறான். ஆனாலும், ஒரு நாள் ஆதி அதை வானத்தில் பறக்கவிட்டு விட்டுக் கைதட்டிக் குதூகலித்தான். கிளியைப் பிரிகிற வருத்தம் இருந்தபோதிலும் அந்தக் கிளியின் சுதந்திரத்தை மகிழ்ச்சியோடு இருவரும் பகிர்ந்து கொண்டனர். ஒரு கிராமத்தின் நதிப்புறத்தில் அந்த இரண்டு குழந்தைகளும் தம் நடுவே கால காலமாய்க் கிழிக்கப்பட்டிருக்கும் கோடுகளைத் தாண்டாமலேயே, ஒரு நதியின் இரண்டு கரைகளிலும் – விலகி உறவுகொண்டு நிற்கும் அக்ரகாரத்தையும் சேரியையும் போல் – விலகி நின்றே விளையாடினர்.

ஆதிக்கு சங்கரனிடம் கதை கேட்பதென்றால் உலகமே மறந்து போகும். ஆனாலும், இடையிடையே அவன் சங்கரனைக்

கேலி செய்து கேள்விகளும் கேட்பான். ஒரு நாள் சங்கரன் அவனிடம் சொன்னான்: ''அந்தக் கிளி அன்னிக்கிப் பறந்ததுபோல் மனுஷனும் சுதந்திரமாய்ச் சிறகடிச்சுண்டு பறந்துடமுடியும்..நான் யாரிடமும் சொல்லாத ரகசியத்தை உன்னிடம் சொல்லுகிறேன். நான் எல்லாரையும்போல் இந்த அக்ரகாரத்திலேயே, சம்சாரக் கூட்டிலே அடைபட்டு வாசம் பண்ணப் போறதில்லே... நான் சந்நியாசம் வாங்கிக் கொண்டு தேச சஞ்சாரம் போய்விடுவேன். அதுதான் என் மனசுக்குப் பிடிக்கறது...''

''என்னமோ பெரிய ரகசியம் சொல்லப் போறேன்னு நினைச்சேன் சாமி'' என்று ஆதி சிரித்தான்.

''அடேய் ஆதி... இதை நான் என் தாயாரிடம்கூடச் சொன்னதில்லே. எத்தனையோ தடவை சொல்ல நினைத்தும் எனக்குச் சொல்ல முடிந்ததில்லே. ஏன்னு, ஒருவேளை அம்மா அழலாம்... உனக்கு ஆதி சங்கரர் கதை தெரியுமோ?''

''சொல்லு சாமி, சொல்லு'' என்று கதை கேட்கும் சுவாரசியத்துடன் தோளில் சாய்த்திருந்த தொறட்டியைத் தரையில் கிடத்திப் போட்டுவிட்டு சம்மணங் கட்டி உட்கார்ந்து கொண்டான் ஆதி. அம்மா சங்கரனுக்கு ஐந்து வயது இருக்கும் போது எப்படி அந்தக் கதையைச் சொன்னாளோ அப்படியே இவனுக்கு அந்தக் கதையைச் சொன்னான் சங்கரன்:

''ஆரியாம்பாளும் அவள் குழந்தை சங்கரனும் வழக்கம் போல் நதியிலே ஸ்நானம் பண்ணப் போனாளாம். அம்மா ஸ்நானம் முடிச்சுக் கரையேறிட்டாள். குழந்தை சங்கரர் நதியிலேருந்து ஒரு காலை எடுத்துக் கரைமேலே வெச்சாளாம். இன்னொரு காலை எடுக்க வரலேயாம். அம்மான்னு அலறினாளாம். அம்மா அந்தக் குரல்லேஇருந்த பீதியைக் கண்டுண்டு 'என்னடா கண்ணே'ன்னு பதைச்சு ஓடி வந்தாளாம்... 'அம்மா, என் காலை முதலே பிடிச்சுண்டுடுத்து'ன்னு கொழந்தை சங்கரர் அலறிண்டே கொஞ்சம் கொஞ்சமா ஜலத்துக்குள்ளே போயிண்டிருக்காளாம்... அம்மா கரை மேலே நின்னுண்டு 'ஐயோ தெய்வமே என் கொழந்தையை யாரும் காப்பாத்த வர மாட்டேளா'ன்னு கதர்றாளாம்... ஆத்திலே போயிண்டே இருக்கிற சங்கரர் அப்போ சொன்னாளாம்: 'அம்மா தெய்வம் நிச்சயம் காப்பாத்தும்... இந்த க்ஷணமே நான் சந்நியாசம் வாங்கிக்கிறேன்னு சங்கல்பம் எடுத்துண்டா, அப்படியே ஆகட்டும்னு நீயும் வாக்குறுதி தந்தால் தெய்வம் என்னைக் காப்பாத்தும்'னு சொல்லிண்டே கழுத்து வரைக்கும் முழுகிண்டு இருக்காளாம்... என்ன பண்ணுவாள் அம்மா?... 'என் கொழந்தை உசிரோடு இருந்தால் போறும், ஆகட்டும்'னு சந்நியாசத்துக்கு வாக்குறுதி தந்தாளாம். குழந்தை சங்கரர் குதூகலமா சிரிச்சிண்டே கரையேறி வந்தாளாம்... கொழந்தையைக் கட்டித் தழுவிண்டு உச்சி மோந்து, முத்தம் கொடுத்துண்டே அம்மா தெய்வங்களை எல்லாம் வாழ்த்தினாளாம். குழந்தையோட பாதத்தைத் தொட்டுத் தொட்டுப் பார்த்தாளாம்... அவரோட பாதங்கள் காயமோ, வடுவோ மாசோ மறுவோ இல்லாத தாமரை மலர் மாதிரி ஜெகஜ்ஜோதியா இருந்துதாம்... எல்லாம் ஈஸ்வர கிருபை... அம்மாவும் குழந்தையும் சந்தோஷமாத் திரும்பி வீட்டுக்கு வர்றச்சே குழந்தை

சங்கரர் வாசற்படி தாண்டி உள்ளே வரமாட்டேன்னுட்டா ளாம்... ''குழந்தே, நோக்குப் பசிக்குமே, ஆகாரம் பண்ண உள்ளே வா''ன்னு அம்மா அன்பா அழைச்சாளாம். ஈரத்துணி யோட வாசல்லேயே நின்னுண்டிருந்த சங்கரர், ''தாயே, என்னை க்ஷமிக்க வேணும், நான் இப்பொழுது சந்நியாசி, வீட்டிற்குள் வந்து ஆகாரம் பண்ணுவதற்கில்லை... பிக்ஷாந் தேகி'ன்னு கூவி இரண்டு கையையும் ஏந்தினுளாம்...'' என்று சங்கரன் ஆதி சங்கரரின் கதையைச் சொன்னவாறு இரண்டு கைகளையும் ஏந்திக்கொண்டு பக்திப் பரவசத்தால் கண்களில் நீர்ப் பெருக்கினுன்...

''மொதலை வந்து இழுத்ததா சொன்னது பொய்யா இருக்குமோ சாமி?'' என்று கேட்டான் ஆதி. சங்கரனுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

அம்மா அந்தக் கதையைச் சொன்ன பொழுது அந்தப் பிராயத்தில் சங்கரன் அவளிடம் கேட்டது நினைவுக்கு வந்தது. 'ஏம்மா நம்ம சங்கராபரண நதியிலே முதலை வந்து இழுக்குமோ?' அவன் அப்படிக் கேட்டது தானும் அவ்விதம் ஒரு வாக்குறுதி பெற்று சந்நியாசி ஆகிவிடவேண்டும் என்ற ஆசையினுல்தான். அதை அறிந்துகொண்ட அம்மா, 'நீ சந்நியாசம் வாங்கிக் கிறதாளு அதெல்லாம் ஈசுவர சங்கற்பம். அதுக்காக ஒண்ணும் உன்னை முதலை இழுத்துண்டு போக வேண்டாம்' என்று தன்னைக் கண்டித்தது நினைவில் வர சங்கரன் சிரித்துக்கொண்டான்:

''அதெல்லாம் பொய்யில்லை, ஆதி! இந்த லோக வாழ்க்கைங் கறது ஒரு நதி மாதிரி...ஆசை, பாசம் இதெல்லாம் முதலைகள் மாதிரி. சந்நியாசியை அதெல்லாம் இழுக்கிறதில்லை. சந்நியாச வைராக்யம் வந்தவா அந்த முதலைகளையெல்லாம் உதறி எறிஞ் சுடுவா..'' என்று அந்தக் கதையின் தாத்பரியத்தை விளக்கினுன் சங்கரன்.

''இதோ பெருகி சுழியிட்டுண்டு ஓடறதே இந்த நதி ஒரு மலையிலிருந்து வர்றது; ஒரு கடலை நோக்கிப் போறது... இந்தக் கரையோரமாகவே ஒரு திசையை நோக்கி நடந்தால் ஒரு சமுத் திரத்தை அடையலாம். இன்னொரு திசையை நோக்கி நடந்தால் ஒரு மலையில் ஏறலாம். மலை உச்சியில் ஏறுவது சந்நியாசம். கடலில் போய்க் கலந்துடறது சம்சாரம்!'' என்று அவன் சொல்லிக் கொண்டிருக்கையில் ஆதி குறுக்கிட்டான்: ''அதுசரி சாமி, இந்த ஆத்திலே குறுக்கப் பாஞ்சி நீஞ்சி அடுத்த கரை ஏறணும்; அது உன்னுலே முடியுமா?'' என்று கேட்டுச் சிரித்தான்.

ஆதியும் அந்தப் பறைச் சேரியிலுள்ள பிற சிறுவர்களும் ஆற்றில் குதித்து விளையாடுவதையும், இந்தக் கரையிலிருந்து அந்தக் கரைக்கு நீந்திப் போவதையும் சங்கரன் பலமுறை பார் திருக்கிறுன். சங்கரனுக்கும் நீச்சல் தெரியும். ஆனுலும் இந்தப் படித்துறையிலிருந்து அடுத்த கரை வரை நதியின் வேக தைக் மறித்துக் குறுக்காகப்போய் மறுகரை ஏறுவதற்கு நீந்தத் தெரிந்தால் மட்டும் போதுமோ? அதற்கொரு மனேபலமும் வேண்டும். ஆதியின் கேள்விக்கு உடனே அவன் பதில் சொல்லா விட்டாலும் இந்த ஆற்றை நீந்தி அடுத்த கரையை அடைய வேண்டுமென்கிற ஆசை மனத்தில் நாளெல்லாம் வளர்ந்து ஓர்

இரவெல்லாம், ஆற்றில் நீந்தி அடுத்த கரையைத் தொடுவதாய்க் கனவு காண வைத்தது.

மறுநாள் ஆற்றங்கரையில் ஆதியைச் சந்தித்தபொழுது சங்கரன் வேட்டியை வரிந்துகட்டி நின்றான். மேல்துண்டைமுறுக்கி இடுப்பில் பலமாகச் சுற்றிக் கொண்டான். அவனது வீறுப்புத் தோற்றத்தைப் பார்த்த ஆதி மிகவும் குதூகலத்தோடு, ''என்ன சாமி தயாராயிட்டாப்பில இருக்கு; நீந்தி அக்கரைக்குப் போகலாமா? நான் இருக்கேன்... தைரியமா குதி'' என்று உற்சாகப் படுத்தினான். ஆதி சொன்ன மாத்திரத்தில் சங்கரன் ஓர் அம்புபோல் தண்ணீரைக் கிழித்துக் கொண்டு நதியில் பாய்ந்தான். ஆதியும் அவனைத் தொடர்ந்து ஆற்றில் குதித்தான். சங்கரன் மிக வேகமாய் ஆற்றின் நடுவில் போய்க் கொண்டிருக்கையில் அவன்பின்னால் சற்றுத்தூரத்தில் நீந்திவந்த ஆதி கூவினான்: ''சாமி, அந்தப் பக்கம் போகாதே, சுழல்... உன் சோத்துக் கைப் பக்கத்துக்கு வா சாமி அந்தப் பக்கம் போவாதே... சாமீ...'' என்று தீனமாய் அலறினான். ஆதியின் எச்சரிக்கை கேட்டு நீந்திக் கொண்டிருந்த சங்கரன் திரும்பிப் பார்த்தான். ஜலப் பிரவாகத்தின் நடுவே இடம் எது? வலம் எது? என்று திசை தெரியாத குழப்பத்தில் ஏதோ ஒரு பக்கம் போகக்கூடாது என்பதை மட்டும் உணர்ந்து அது எந்தப் பக்கம் என்று தெரியாமல் அந்தப் பக்கமே அவன் போய்க் கொண்டிருந்தான். ''சாமி சாமி'' என்ற ஆதியின் குரல்மட்டும் சற்றுநேரம் ஒலித்தது. அதன்பிறகு சங்கரனுக்கு ஒன்றும் தெரியவில்லை. ஒரு சுழல் அவனை இழுத்து முறுக்கிற்று. நீரின் அலைகள் மலைப்பாம்புக் குவியல் மாதிரி அவன் மீது கவிந்து மேலே தலைதூக்க முடியாமல் அழுத்தி எங்கோ இழுத்துக்கொண்டு போயின...

சங்கரனுக்கு அம்மா சொன்ன மார்க்கண்டேயன் கதை அப்போது நினைவுக்கு வந்தது! ''ஈசனை இறுகப் பற்றிக்கொள்வாரை எமன் நெருங்குவதற்கு அஞ்சுவான்.''

ஈசன் எங்கே? அவன் எங்குதான் இல்லை? நீக்கமற எங்கும் நிறைந்திருப்பவன் இந்த நீர்ச் சுழலில் மட்டும் இல்லாமற் போய் விடுவானா?

சுழலில் பாய்ந்து மூழ்கிய ஆதி யந்திரம்போல் துழவினான்; ஆதியின் கையில் சங்கரனின் குடுமி சரியாய்ச் சிக்கிற்று!

நீரடியில் சங்கரனின் சித்தத்தில் மார்க்கண்டேயன் சிவலிங்கத்தைத் தழுவிக் கொள்வதும், எருமைக் கிடாவின் மீது பாசக்கயிற்றைச் சுழற்றிவரும் எமனும் ஒரு நாடகம் போல் தெரிய, ஒரு காட்சிபோல் விரிய... கன்னங் கரேலென்ற சிவலிங்கம் நீரடியில் கண்முன் எழுந்தது... அவன் அதை ஆறத் தழுவிக் கொண்டான்...

மரணத்திடமிருந்து இரண்டு உயிர்களும் தப்பிக் கரை ஏறின. ஒரு உயிர் இன்னொன்றைச் சுமந்தது. சங்கரன் வெகுநேரம் மூர்ச்சையாய்க் கிடந்தான். கரைமீது கொணர்ந்து அவனைக் குப்புறக் கிடத்தி முதுகில் அமர்ந்து வாயாலும், மூக்காலும் தண்ணீர் வெளிவர, தான் அறிந்த வித்தையெல்லாம் செய்தான் ஆதி. அவன் இடுப்பில் இறுகிக் கிடந்த வஸ்திரங்களை அவிழ்த்து இறுக்

கத்தைத் தளர்த்தினன் பின்னர் எல்லாவற்றையும் உரித்துப் போட்டான். சங்கரன் கௌபீனத்தோடு தரையில் கிடந்தான். சிறிது நேரத்துக்குப்பின் அவனுக்கு பிரக்ஞை வந்தபோது அவனது உலர்ந்த வஸ்திரங்களை ஆதி எடுத்துக்கொண்டு வந்தான். பிரக்ஞை வந்ததும் சங்கரன் துள்ளி எழுந்து உட்கார்ந்தான். இருவரும் ஒருவரைப் பார்த்து ஒருவர் அர்த்தம் தொனிக்க உரக்கச் சிரித்துக் கொண்டனர்.

''சாமி நீ கெலிச்சுட்டே'' என்று அவனைப் பாராட்டி ஆதி சிரித்தான். சங்கரன் மனத்துள் ஏதேதோ ஸ்லோகங்களை முணகிக் கொண்டிருந்தான். எதிரே வந்து நின்ற ஆதி தன்னை மரணத்திலிருந்து மீட்ட சிவனேபோல் தோன்றினன். தூரத்தில் அக்கரையில் தெரிகிற அக்ரகாரத்தையும், சிவன் கோயில் கோபுரத்தையும் சங்கரனின் கண்கள் வெறித்தன. அவன் தன் மனத்துள் சொல்லிக் கொண்டான்: ''இனி நான் தெய்வத்தை வணங்கும் பொழுதெல்லாம் இவனையே வணங்குவேன். நான் எந்த நிலையில் இருந்தாலும் இந்த உடலில் உயிர் உள்ளவரை ஈசனை நமஸ்கரித்துக் கொண்டுதான் இருப்பேன். அப்போதெல்லாம் என் மனத்துள் ஈசனின் வடிவமாய் இவன் உருவமே துலங்கும்''

''என்னசாமி அப்படிப் பார்க்கிறீயே... நல்லவேளை எந்த சாமி புண்ணியமோ சுழல்லே போய் நீ சிக்கிறத்துக்குள்ளே உன்னை நான் புடிச்சிட்டேன். நான் போவாதே போவாதேன்னு அலறிக்கினே இருக்கேன்... நீ அங்கேயே போயிகினு இருக்கியே சாமி'' என்றெல்லாம் பேசிக் கொண்டே இருந்தான் ஆதி.

இத்தனைக்கும் நடுவில், ஆதி தீண்டிவிட்ட தனது உலர்ந்த வஸ்திரங்களைத் தொட முடியாமல் தவித்துக் கொண்டிருந்தான் சங்கரன்.

''ஆதி, உன் கையாலேயே எடுத்து அந்தத் துணியை ஜலத்திலே போட்டுடேன்... நான் பிழிஞ்சு எடுத்துண்டுடறேன்'' என்றான் சங்கரன்.

ஆதி சிரித்தான். சங்கரனும் சிரித்தான்: ''ஈரம் இருந்தால் தீட்டு கிடையாது... எல்லாம் உலர்ந்துபோனால் தீட்டுதான்...'' என்று விசித்திரமாய் முனகினன் சங்கரன். ஆனாலும் தனது செய்கைக்காக அவன் உள்ளூர வெட்கப்பட்டுவிட்டான்... வெட்கம்தான் பட முடிகிறதே தவிர... சில காரியங்களை விட முடிகிறதா?

''அதெல்லாம் சரிதான் சாமி... ஒருத்தரை ஒருத்தர் தொட்டுக்கறது — எல்லாருக்கும் ரொம்ப முக்கியமோ?'' என்பதாகச் சமாதானம் கூறினன் ஆதி.

ஆற்றின் அக்கரையில் அன்று அவர்கள் பொழுது போக்கினர்கள். பக்கத்தில் பறைச்சேரியும் சுடலையும் தெரிந்தன. நல்லவேளையாக அவர்களையோ இங்கு நடந்த—அல்லது நடக்காமல் தவிர்ந்த விபத்தைப் பற்றியோ யாரும் அறியாதிருந்தனர்.

''அப்பாவுக்குத் தெரிந்தால்'' என்கிற நினைவே சங்கரனுக்குக் குலை நடுக்கம் ஏற்படுத்தியது.

ஆனாலும் அன்று இரவு அம்மா சாதம் பரிமாறும் பொழுது இந்தச் சம்பவத்தை அவளிடம் மறைக்க முடியாமல் அவன் விவரித்தான். அம்மா கேட்டு மனம் பதறிப்போனாள். அவள்தான் முதலில் சொன்னாள்: ''ஈஸ்வரனே அந்தப் பறைச் சிறுவன் கோலத்தில் வந்து உன்னைக் காப்பாற்றியிருக்கிறார்'' என்று. அதைத் தொடர்ந்து அவள் ஒரு கதையும் சொன்னாள்:

''ஆதிசங்கரர் தன்னோட சிஷ்ய பரிவாரங்களோட எங்கேயோ ஒரு வனாந்திரத்திலே ஒரு ராத்திரி தங்கியிருந்தாளாம்... சிஷ்யாள் எல்லாம் போஜனத்துக்குத் தீ மூட்டி ஆகாரம் சமைச்சாளாம்... இதையெல்லாம் அந்தக் காட்டிலே ஒரு மரத்தடியிலே ஒளிஞ்சிண்டு ஒரு சண்டாளன் பார்த்துண்டு இருந்தானாம். சங்கரர் இதைக் கவனிச்சுண்டு பேசாம இருந்தாளாம்...

சிஷ்யர்கள் ஆசாரியாளுக்கு ஒரு கவளம் அன்னம் கொண்டு நிவேதனம் மாதிரித் தந்தாளாம்... அவாளையெல்லாம் நீங்க போய் ஆகாரம் பண்ணுங்கோன்னு அனுப்பிட்டு, அவாளுக்குத் தெரியாமல், தன் கையிலிருந்த கவளத்தைக் கொண்டுபோய், ஒளிஞ்சுண்டு இருந்த சண்டாளனுக்குத் தந்து 'யாரும் பார்க்காம சாப்பிடு'ன்னு சொல்லிட்டு வந்துட்டாளாம்... கொஞ்சம் நாழிக் கப்புறம் கையிலே சாதத்துக் கவளத்தை ஏந்திண்டு அவன் வந்து ஸ்வாமிகள் கிட்டே சொன்னானாம்... ''யாருமில்லாத இடம்னு ஒண்ணு இல்லையே சாமி... எல்லா இடத்திலும் பரமசிவன் நின்னுண்டு பார்க்கிறானே''ன்னானாம்.

உடனே ஆசாரிய சுவாமிகள் 'நீயே என் குரு' என்று அவனை நமஸ்காரம் பண்ணிண்டாளாம். பரமேஸ்வரனே ஒரு புலையனா வந்தான்னு அப்புறம் எல்லாரும் தெரிஞ்சுண்டாளாம்...'' என்று அம்மா கதையாகச் சொன்னாள்! சங்கரன் கண்களைமூடி மனத்துள் ஆதியின் உருவத்தை வணங்கினான். அன்று முதல் ஒவ்வொரு நேரமும் அவனை வணங்கிக் கொண்டுதானிருக்கிறான். அதெல்லாம் ஆதிக்குத் தெரியாது. ஆதிக்கே தெரிய வேண்டுமோ?

ஒரு தீண்டத்தகாத சிறுவனை தெய்வமாகச் சங்கரன் வணங்குகிறான். ஈஸ்வரனே புலையனாக வருவான் என்கிறாள் அம்மா. அந்தப்புலையர்களை ஆலயத்துக்குள் அனுமதிக்க வேண்டும் என்கிறார் சித்தப்பா. அதை எதிர்த்து உயிரைக் கொடுத்தேனும் தடுப்பேன் என்று உறுதியாக நிற்கிறார் அப்பா.

மகா சிவராத்திரிக்கு இன்னும் கொஞ்சம்நாள் இருக்கிறது.

சதாசிவம் கொட்டி முழக்கிய தமுக்கோசையும், கூவிப் பரப்புகிற கொள்கைகளும், வீட்டில் கூடத்தில் குமுறிக் கொண்டிருக்கிற அப்பாவும் சங்கரனின் மனத்தில் குழம்ப, அவன் ஆதியைக் கேட்டான்: ''சித்தப்பா உங்களை எல்லாம் ஆலயப் பிரவேசம் பண்ணவைக்கப் போகிறாராம். நீயும் போவாய் இல்லையோ?.....''

ஆதி தலையைக் குனிந்து கொண்டு பதில் சொன்னான்: ''நான் போகமாட்டேன் சாமி''

சங்கரன் வியப்புடன் அவனை விழியுயர்த்திப் பார்த்தான்: ''ஏன் அப்படி? அவர் உன்னோட ஆசிரியர்ங்கற முறையிலே உன்னைக் கட்டாயப் படுத்தினல் என்ன செய்வே? ஏதோ ஊர்லே இருக்கிறவா சிலபேர் ஆலயப்பிரவேசத்தை எதிர்க்கிருங்கறத்துக்காக உன் குருவை எதிர்த்து நீ எப்படி நடக்க முடியும்? எனக்குக்கூட அதிலே விருப்பம் இல்லைன்னு நீ நினைக்கிறியா? அதனலே போகமாட்டேன்னு சொல்றியா?''

''அப்படித்தான், வெச்சுக்கியேன் சாமி... நம்மை வர வேணும்னு சொல்ற இடத்துக்கு நாம போலாமா சாமி? என்னைத் தொடாதேங்கிறவங்களை நாம்ப தொடலாமா சாமி? என்னைத் தொடறத்துக்கு உனக்கு எவ்வளவு கூச்சம் இருக்கோ அதே மாதிரி உன்னைத் தொடறத்துக்கும் எனக்குக் கூசுது சாமி.. ஆனு அன்னக்கி நீ ஆத்திலே போனியே அந்தக் கூச்சம் அப்போ உனக்கு இருந்துதா, எனக்கு இருந்துதா? அப்படி ஒரு அவசியமா என்ன, கோயிலுக்குள்ளே நாம போறது? சாமி கோயிலுக்குள்ளே மட்டுமா இருக்குது?'' என்று அவன் பேசிக் கொண்டிருந்தது சங்கரனுக்கு அவன் மீது மேலும் மரியாதையை ஏற்படுத்தியது. சித்தப்பாவுக்கு ஏன் இந்த நியாயம் புரியவில்லை? என்ற எண்ணம் அவனுக்கு ஏற்படுகையில் அதற்குப் பதில் கூறுவது போல் ஆதி சொன்னன்: ''காந்தி மகாத்மா சொல்லிட்டார்னு அதுக்கு மறுபேச்சே கிடையாதுதான்... அதனலேதான் நம்ப ஆஸ்ரமத்து ஐயரு சாதி, சனம் எல்லாத்தையும் விரோதிச்சிட்டு எப்படியாவது ஆலயப்பிரவேசம் பண்ணிடனும்னு நிக்கிருரு... எங்க சேரி ஆளுங்களெல்லாம் கொஞ்சம் பேரு நீங்க சொன்னமாதிரி ஊர்க்காரங்களுக்குப் பயந்துகிட்டு மாட்டேன்னுதான் சொல்ருங்க. ஆனலும் கொஞ்சம் பேரு அந்த ஐயரு சொல்ற நியாயத்துக்குக் கட்டுப்பட்டுப் போவத்தான் போவாங்க..ஒரு நாளுதானே சாமி, அந்தக் கூத்து? அப்புறம்.. நம்ப அப்பையர் அதுக்கு எதனச்சும் பரிகாரம் பண்ணிடுவார்... நம்பப் பறையன்களுக்கு இப்ப கோயில் தரிசனம் இல்லாமல் தான் கொறை ஏறிக் கூத்தாடுதோ?'' என்ருன் ஆதி: ''மத்த நியாயமெல்லாம் இருக்கட்டும் சாமி, நமக்கு நெஜமாலும் பக்தி இருந்தா தெய்வம் நம்மகிட்ட வராதா சாமி?.. எல்லாரும் வேணும்னு சொல்ற ஒரு இடத்துக்கு எதுக்கு சாமி நாம்ப போவணும்? மானத்துக்குப் பயந்துதான் நான் மாட்டேன்னேன். பெரிய ஐயரு ரொம்பத்தான் உடைஞ்சு போயிட்டாரு. இவங்களுக்கெல்லாம் காந்தி இருக்கருமாதிரி உங்களுக்கெல்லாம் யாரும் தலைவர் கிடையாதா?'' என்று கேட்டான் ஆதி.

சங்கரனுக்கு அந்தத் தலைவரின் நினைவு வந்தது. மானசீகமாக அவரை மனத்துள் எண்ணி நமஸ்கரித்து விட்டுச் சொன்ஞன்: ''உண்டு உண்டு; எங்களுக்கு மட்டும் அல்ல. இந்த ஜகத்தின் தலைவர் அவர். அவரை தரிசனம் செய்யும் பாக்கியம் எனக்கு ஒருதடவை கிட்டியிருக்கிறது. அப்பா அடிக்கடிபோய் அவரை தரிசனம் செய்வார். ஆதி, நீ சொல்வதுதான் சரி, இங்கே கிடந்து தவித்துக் கொண்டிருப்பதை விட அப்பா ஒரு முறை ஸ்ரீமடத்துக்குப் போய் வருவது நல்லதாய் இருக்கும்'' என்று சொல்லிவிட்டு, தனக்கு இந்த யோசனை வராதது குறித்

தும், இவனுக்கு வந்ததற்காகவும் ஆதியைப் பாராட்டினான் சங்கரன்.

தமுக்குச் சத்தம் ஓய்ந்ததும் கோயில்மணி முழங்கிற்று. அக்ரகாரத்துத் தெருவில் எல்லாவீடுகளிலும் மாடப்பிறையில் மாலை விளக்கு ஏற்றப்பட்டது. இருளில் பறைச்சேரியில் அடுப்பு எரிகிற வெளிச்சம் தூரத்தில் தெரிந்தது. கன்னங்கரேலென்று சங்கரா பரண ஆறு இரைச்சலிட்டவாறு கண்ணுக்குத் தெரியாமல் ஒரே இருளாக ஓடியது. ஆற்றின் அக்கரையிலிருந்து' ''ஏலே ஆதீஈஈ'' இந்தக் கரையை அவன் குரல் எட்டுகிறவரைக்கும் நீட்டி முழக்கினான் மாரி.

''கும்புடறேன் சாமி'' என்று எழுந்து நின்று சங்கரனிடம் விடைபெற்றுக் கொண்டு தொறட்டிக்கோலுடன் நடந்தான் ஆதி. அவன் மூங்கிற்பாலம் கடந்து போகிறவரை இருளைப் பார்த்த வாறு உட்கார்ந்திருந்த சங்கரன் எழுந்து அக்ரகாரத்தை நோக்கி நடந்தான். அவன் வீட்டிற்கு வந்தபோது கூடத்து அறையில் சித்தியைச் சுற்றிலும் எல்லாரும் நின்றிருந்தார்கள். அவள் அடிக்கடி இந்த மாதிரி பயம் காட்டுவாள். நோயாளியான அவளுக்குத் தினந்தோறும் புனரபி ஜனனம் புனரபி மரணம்தான். அம்மா கூடத்து அறையிலிருந்து கையில் விளக்கோடு வெளியில் வந்தாள். தேவி அப்பாவின் மனநிலை தெரியாமல் அவர் மடியின் மீது உட்கார்ந்து அவரோடு மழலைபேசி விளையாடிக் கொண்டிருந்தாள். சங்கரன் வீட்டுக்குள் நுழைந்ததும் எதிரில் வந்த அம்மாவிடம் சொன்னான்: ''அம்மா நேக்கு ஒரு யோசனை தோணறது'' என்றதும் அவனைக் கடந்துபோக இருந்த அம்மா கையில் விளக்குடன் நின்றாள்.

மடியிலிருக்கும் குழந்தையின் நினைவுகூட இல்லாமல் உட்கார்ந்தவாறு தூணில் சாய்ந்திருக்கும் அப்பாவைப் பார்த்தான் சங்கரன். அவனுக்குத் தந்தையிடத்தில் மிகுந்திருந்த மரியாதையும், பணிவும் தன் மனத்தில் தோன்றியதை அவருக்கு முன்னால் சொல்ல முடியாமல் தடுத்தன. அம்மாவும் அதைப் புரிந்துகொண்டு 'ஏதோ முக்கியமான விஷயம்; பிறகு சொல்லு வான்' என்று அவனைக் கடந்து பூஜையறைக்குப் போனாள். அவன் அம்மாவைத் தொடர்ந்து போனான். பூஜையறை வெளிச்சத்தில் சுவரில் மாட்டியிருந்த ஆசார்யசுவாமிகளின் திருவுருவப் படத்தின் முன்னால் சற்று நேரம் நமஸ்கரித்து நின்றான். ஐந்து வயதில் அவரை தரிசித்தபோது நேர்ந்த அனுபவத்தின் நினைவால் அவன் மனமும் தேகமும் சிலிர்த்தது. அவரை நமஸ்கரித்த நிலையிலேயே நின்று பார்வையைக் கூடத் திருப்பாமல் அந்தப் படத்தோடு வாய்விட்டுப் பேசினான். அம்மா அதைக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

''நடந்தது, நடப்பது, நடக்கப்போவது ஆகிய திரிகாலமும் உணர்ந்த சர்வக்ஞ, ஞானவைராக்கியம் குன்றி இங்குள்ள அந்தணர்களின் மனம் அலைபாய்கின்றதே...இப்படி ஒரு காரியத்தை 'நிகழ்த்துவேன்' என்றும், 'அதனைத் தடுப்பேன்' என்றும் எனது பெரியோர்கள் இங்கு வேறுபட்டு நிற்பது கண்டு சிறியவனாகிய எனது மனம் சதா சலிக்கின்றதே... எதுசரி? எது சரியற்றது? என்று பெரியவர்களே தீர்மானிக்க முடியாது இருபுறமும் திசைக்

கொருவராய் நிற்க என்மனம் எத்திசையிலும் திரும்ப முடியாமல் வேதனையுறுகிறதே... எல்லாம் அறிந்த மாகாஞானியே, எங்களுக்கு ஞானமும் சக்தியும் தந்து எங்களைக் குழப்பத்திலிருந்து கரை யேற்றுங்கள். உம்மை நாடி வருவதற்கான எண்ணமே இல்லாமல் இடர்ப்படுவோரை கருணைகொண்டு உம்பால் அழையுங்கள். ஒரு பெண்ணைப்போல் அழுகின்ற பிராமணோத்தமர்களைப் பார்க்க என்மனம் பேதலிக்கின்றதே... ஞான வைராக்ய சித்யர்த்தம் பிக்ஷாம் தேகி'' என்று பூஜையறையில் சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்துக் கிடந்த மகனைக் கண்ணீர் மல்கப் பார்த்தாள் அம்மா.

ஆசார்ய சுவாமிகளை எண்ணி அவளும் நமஸ்கரித்தாள். பூஜையறையிலிருந்து வெளியே வந்து கணவரிடம் சொன்னாள்: ''நீங்கள் ஸ்ரீமடத்துக்குப் போய் ரொம்ப நாளாச்சு. இப்ப ஒருதடவை போய் வந்தேள்னா அவர் அநுக்கிரகத்தால் நிச்சயம் நல்லவழி பிறக்கும்.''

இவ்வளவு நேரமாய்க் கண்மூடி உட்கார்ந்திருந்த மகாலிங்க ஐயர், மனைவியின் முகத்தைப் பார்த்தார். அவர் கண்களில் ஒரு நம்பிக்கை சுடர் விட்டது. அவர் முகத்தில் ஒரு புது உற்சாகம் ஒளி வீசிற்று.

''இந்த க்ஷணம் நான் என்ன நினைச்சுண்டிருந்தேனோ அதையே ஒரு அசரீரி மாதிரி சொல்றயே'' என்று மனைவியைப் பாராட்டினார்.

ஸ்வாமியுள்ளிலிருந்து வெளியே வரும் சங்கரனைப் பார்த்து அப்பா சொன்னார்: ''சங்கரா, ஸ்ரீமடத்துக்கு நீயும் வாயேன்'' என்று சொல்லி கொஞ்சம் நேரம் யோசித்து, ''நாளைக்கு நாள் நன்னாருக்கு; காலையிலே புறப்படணும்'' என்றார்.

வாழ்க்கையில் மீண்டும் ஒருமுறை பெரியவாளைத் தரி சனம் செய்யப்போகிற பாக்கியம் கிட்டப் போகிறது என்று எண்ணிய பரவசத்தில் சங்கரன் மெய் சிலிர்த்தான். ஐந்து வய தில் ஒருமுறை அவரை தரிசித்த அனுபவம் மீண்டும் உள்ளத்தில் ஒளி வீசியது. சிரசிலிருந்து பாதம்வரை மூடி வழிந்து கொண்டி ருந்த துவராடையின் உள்ளேயிருந்து திருமுகம் மட்டும் வெளியே தெரிய, அவர் அவனைப் பார்த்துச் சிந்திய மென்னகை அந்தப் பருவத்திலேயே அவனை அடிமை கொண்டிருந்தது. நிலவைப் போல் குளிர்ந்து ஒளிவீசும் அந்த விழிகளை மீண்டும் ஒருமுறை காணும் பாக்கியம் எப்போது லபிக்கப் போகிறதோ என்று பல முறை அவன் ஏங்கியிருக்கிறான். அவர் இவனை ஒரு குழந்தையாகக் கருதிக் கொஞ்சிய வார்த்தைகளெல்லாம் வேத மந்திரங்களாகவே இவனுக்குப் புரிந்தன.

இரவெல்லாம் அந்த தெய்விக நினைவில் தோய்ந்து உறக்கமில்லாமல் உதயத்தை எதிர் நோக்கிக் காத்திருந்தான். விடியற்காலையில் இருட்டு விலகுவதற்கு முன்னர் அப்பாவோடு கூடவே சங்கரனும் ஆற்றுக்கு நீராடப் போனான்.

சங்கரபுரத்திலிருந்து பத்துமைல் தூரம் மாட்டுவண்டியில் போய்த்தான் ரயில்வே ஸ்டேஷன் இருக்கிற ஊரை எட்ட முடி யும்.

சங்கரனுக்கு மனம் உல்லாசமாயிருந்தது. சங்கராபரண ஆற்றின் கரை மேட்டில் விடியற்காலைப் போதில் மாட்டுவண்டியில் அப்பாவோடு போய்க் கொண்டிருந்தபோது மூங்கில் பாலத்தின் மேல் நின்றிருந்த ஆதியைப் பெயர் சொல்லிக் கூப்பிட வேண்டும் என்று எழுந்த ஆவலை, ஆழ்ந்த யோசனையோடு அருகே உட்கார்ந்திருக்கும் அப்பாவைப் பார்த்து அடக்கிக் கொண்டான் சங்கரன். வண்டிமாட்டின் கழுத்துச் சலங்கை ஓசையைக்கேட்டு மூங்கிற்பாலத்துக்கு அப்பால் வண்டிபோகிற காட்சியை வேடிக்கைப் பார்த்தான் ஆதி. அவனும் வண்டியினுள் அமர்ந்திருக்கிற சங்கரனைக் காணவில்லை. தன்னை அவன் பார்க்கமாட்டானு என்கிற ஏக்கத்துடன் மூங்கிற்பாலம் மறைகிறவரை அங்கேயே பார்த்துக் கொண்டிருந்தான் சங்கரன். ஆதி எங்கோ பார்த்த வாறு பல்துலக்கிக் கொண்டிருந்தான்; பிறகு குச்சியை ஆற்றில் எறிந்து அது தண்ணீரில் அமிழ்கிறவரை குனிந்து பார்த்துக் கொண்டிருந்தான். வண்டி ஒரு வளைவில் திரும்புகிற பொழுது மூங்கிற்பாலமும் அதன் மீது நின்றிருந்த ஆதியும் அந்த ஆலமரத்துக்குப் பின்னால் சரசரவென மறைந்தனர். சங்கரன் ஆதியைக் கண்ட கடைசிச் சித்திரம் அதுதான்.

வண்டிமாட்டின் கழுத்து மணிஓசை அவன் மனத்துள் ஒலித்த ஸ்தோத்திரங்களுக்கு ஏற்க ''ஜயஜய சங்கர'' என்று கோஷிப்பதாய்...

ரயில் பிரயாணம் செய்யும்போது அதன் அதிர்ச்சியும், பேரோசையும் ''ஜயஜய சங்கர'' என்று முழங்குவதாய்...

ஸ்ரீமடத்துக்குப் போவதாக தீர்மானமான அந்த விநாடியிலிருந்து சங்கரன் ஆனந்தபரவசனாகியிருந்தான். நேரம் நெருங்க நெருங்க அது மேலிட்டவாறு இருந்தது. ஆயிரம் கவலைகளில் மனம் அலைக்கழிந்து கொண்டிருந்த மகாலிங்க ஐயர் கூட மிகுந்த உற்சாகத்தோடு மனத்துள் நாமசங்கீர்த்தனம் செய்து கொண்டிருந்தார். பிரயாணத்தின் போது சில சமயங்களில் அவர் வாய்விட்டே பாடினார். அவரோடு சேர்ந்து சங்கரனும் பாடினான். சில சமயங்களில் அவனைப் பாடச்சொல்லிக் கேட்டார். ஸ்லோகங்களை உச்சரிக்கும் பொழுது வெளிப்பட்ட அவனது உள்ளுணர்வு அவரை மெய்சிலிர்க்க வைத்தது.

மகாலிங்க ஐயருக்குத் தன் புத்திரனைக் குறித்த ஒரு பெருமித உணர்வு எப்போதும் இருந்தது. ஆனால் நேற்று, தன் மனைவி கூறக்கேட்டு அவனது மனோநிலையை அறிந்து கொண்ட பின் இவனைத் தன்மகன் என்பதால் சாமானியமாய்க் கருதலாகாது என்ற எண்ணமும், ஊரில் நடந்த சம்பவங்களால் தனக்கும் தன் தம்பிக்கும் இடையே ஏற்பட்டுவிட்ட பேதத்தால் இந்தக் குழந்தையின் மனத்தில் இவ்வளவு பெரிய புயலை எழுப்பியிருக்கிற பிரமிப்பும், சநாதனதர்மத்தைக் குறித்த ஒரு நம்பிக்கையும் அவருக்கு ஏற்பட்டது. ஆயினும் அவனோடு அவற்றைக் குறித்துப் பேச அவருக்கு மனம் துணியவில்லை. இந்தத் தடவை அவனையும் தன்னோடு ஸ்ரீமடத்துக்கு அழைத்து வருவது மிகப்பொருத்தமான காரியம் போன்றும், இந்தப் பயணத்தில் அதுவே மிக முக்கியமான காரியம் என்றும் அவரது உள்ளுணர்வு பேசிற்று.

சூரியன் அஸ்தமிப்பதற்கு முன்பாக அவர்கள் ஸ்ரீமடத்தை வந்து அடைந்தனர். அவர்கள் வந்த நேரத்தில் குரு சந்நிதானத்தில் பக்த கோடிகள் சூழ்ந்திருந்தனர். மாட்டின் கழுத்து மணியிலும், ரயிலின் சக்கர சுழற்சியிலும் மான சீகமாய் ஒலித்துக் கொண்டிருந்த சங்கர நாமாவளி ஒரு நிதர்சனமாய் கட்புலனுக்கும், செவிப்புலனுக்கும் நிரூபணமாகிக் கொண்டிருந்தது. தந்தையும் மகனும் பக்த குழாத்துடன் சேர்ந்து 'ஜயஜய சங்கர' 'ஹரஹர சங்கர' என்று கோஷித்தவாறு சதஸில் அமர்ந்தனர்.

பூஜை, ஆராதனை எல்லாம் முடிந்து பக்தர்குழாம் கலைகிற வரை, புதிதாக வந்தவர்கள் போலல்லாமல் இயல்பாகவே அந்த பக்த கூட்டத்தோடு பொருந்தி சகல அனுஷ்டானங்களிலும் சங்கரன் பங்குபெறுவதைப் பார்த்து மகாலிங்க ஐயருக்குப் பேரானந்தமாய் இருந்தது. மடத்தில் உள்ள அவருடைய சநாதன நண்பர்கள் இவர்களை அழைத்துச் சென்று உபசரித்தனர்.

மகாலிங்க ஐயர் ஸ்ரீமடத்திலிருந்த அடியார்களுக்கு ஏற்கனவே நன்கு பரிச்சயமானவர். அவர்கள் சதாசிவஐயரைப் பற்றி ஏதோ கேள்விப்பட்டிருந்தார்கள். அவர்களிடம், தான் சுவாமிகளை தரிசிக்க வந்த முகாந்திரத்தை விளக்கி இந்த இக்கட்டான நிலையில் தான் என்ன செய்வது என்று அறிந்து செல்லும் உத்தேசத்தை எடுத்து உரைத்தார். தான் மனமுடைந்து, மதிகுழம்பி இருந்த வேளையில் ஸ்வாமிகளை தரிசித்து வருகிற உபாயத்தை மொழிந்த சங்கரனை எல்லார் முன்னிலையிலும் புகழ்ந்தார். ஸ்ரீமடத்திலுள்ள அடியார்கள் சிறுவன் சங்கரனின் தேஜஸையும், தீட்சண்யமிக்க விழிகளையும், அவன் ஸ்லோகங்களை உச்சரிக்கும் பொழுது அவனுள் ஏற்படுகிற பரவசத்தையும் உணர்ந்து அவனை வெகுவாகப் பாராட்டினர். சங்கரன் அந்த சத்சங்க சூழ்நிலையில் மெய்மறந்திருந்த போதிலும் மகாலிங்க ஐயரின் பிரச்னை எவ்விதம் தீர்வு காணப் போகிறது? என்ற ஆதங்கத்தோடு காத்திருந்தான்.

மகாலிங்க ஐயர்வாளை ஸ்வாமிகள் அழைப்பதாக ஒருவர் வந்து எல்லோரிடமும் குனிந்து பவ்யமாக தெரிவித்தார். உட்கார்ந்திருந்த சங்கரன் தன்னை அழைத்த குரலாகவே அதனை அறிந்து எழுந்து நின்றான். தந்தையும் மகனும் மேல்துண்டை இடுப்பில் சுற்றிக்கொண்டு பணிவுடன் சந்நிதானம் சென்று அடைந்தனர்.

அங்கே ஒரு பெரிய அகல்விளக்கு ஜெகஜ்ஜோதியாய் எரிந்து கொண்டிருந்தது. இந்த ஒரு விளக்குக்கு இவ்வளவு பிரகாசமா? என்று வியக்கும் வண்ணம் அதன் சுடர் மிகையாய்ப் பிரகாசித்துக் கொண்டிருந்தது.

மகாலிங்க ஐயரும் சங்கரனும் அவர் முன்னால் சாஷ்டாங்கமாகப் பணிந்து எழுந்தனர். தலையை நிமிர்த்துகிற பொழுதே மகாலிங்க ஐயர்வாளின் கண்கள் குளமாகி இருந்தன. கூப்பியிருந்த கைகள் நடுங்கின. உள்ளத்திலுள்ள குமுறல்களை வெளியிட முடியாமல் நாவும் குரலும் தழுதழுத்தன.

''பிரபோ...'' என்றதும் அவருக்குக் குலுங்கிக் குலுங்கி அழுகை வந்தது. ஜகத்குரு சகலமும் உணர்ந்தவர். ஞான

மும் கருணையும் ஒளிவீசும் அவரது விழிகளால் ஒருமுறை அவரை ஏறிட்டுப் பார்த்து மென்முறுவல் பூத்தார். மகாலிங்க ஐயர் அந்த ஒருவிணடி அமைதியும் நிம்மதியும் பெற்றுப் பழைய நிலையை அடைந்தார். மனத்தின் பாரத்தையெல்லாம் இரண்டு சொட்டுக் கண்ணீரில் இறக்கி வைத்தது போன்ற நிம்மதி பிறந்தது. சங்கரன் கூப்பிய கைகளோடு மனத்துள் மடைதிறந்தாற் போன்று பெருகிய மந்திரங்களை மௌனமாய் அர்ச்சித்தவாறு நின்றிருந்தான். அகல் விளக்கில் முடிச்சுக் கட்டியிருந்த கடுகு போன்ற கங்குகள் பொரிந்து தெறித்தன. ஆச்சார்ய சுவாமிகள் ஒரு தம்பூரில் சுருதி கூட்டுகின்ற ரீங்காரம் போன்ற தொனியில் ஒரு கீதையின் ஸ்லோகத்தைச் சொன்னர்! அந்த ஸ்லோகத்தின் கடைசி வார்த்தையான ''மா சுச:'' என்ற பதத்தை மனத்துள் அப்படியே வாங்கித் தேக்கிக் கொண்டான் சங்கரன்.

''துயரப்படாதே'' என்று பகவான் அர்ச்சுனனுக்குச் சொன்ன வாக்கு அது.

''என்ன நடந்து விட்டது? என்னதான் நடந்துவிடப் போகிறது? எதைத் தடுத்துவிடமுடியும்? எது தடுக்கத் தக்கது? என்றெல்லாம் தேர்ந்து கொண்டு விட்டாயா? உனது சகோதரர் செய்கிற செயல்களுக்கு அது புண்ணியமோ, பாபமோ? உனக்கு அதில் ஒரு பொறுப்புமில்லை. ஒவ்வொரு செயலுக்கும் ஒரு கால எல்லையுண்டு. சநாதன தர்மத்துக்கு இவற்ருலெல்லாம் ஏதும் பங்கம் நேர்ந்து விடாது. ஓர் அத்வைதி சடங்குகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவன் என்பதை அறிவாய், அல்லவா? அப்படி என்ருல் உனது சம்ஸ்காரங்களும் சடங்குகளும்கூட ஒரு கால எல்லைக்கு உட்பட்டவையே. எங்கும் நிறைந்திருக்கும் ஈசன் எவருடைய எந்தச் செய்கையால் எங்கிருந்து எங்குப் போய் விடுவான்? எல்லாவற்றையும் ஈஸ்வரார்ப்பணம் என்று கருதிக் கொண்டு உனது கடமைகளை மகிழ்ச்சியோடு செய்!''

சங்கரன் அந்த வாசகங்களைக் கேட்டுப் பரவசம் கொண்டு நின்ருன். மகாலிங்க ஐயரின் மனமோ சஞ்சலமும் அதைரியமும் கொண்டு எதுவும் பேசவும் முடியாமல் தனது குழப்பத்திலிருந்து மீள்வதற்கு வழியும் அநுக்கிரகமும் கிட்டாதோ என்ற அவநம்பிக்கையில் உழன்றது.

''ஒரு குழந்தை போல் உலகத்தைக் கண்டு குதூகலிக்கிற சுபாவமும் ஒரு பித்தனைப் போல் உலகத்தை மதியாத மனமும் ஒருங்கே படைத்தவன் யோகி என்பதை நீ அறிவாய்? சரிசரி. லௌகீகவழியில் உனக்கு ஏதேனும் சமாதானம் வேண்டும்... சம்சாரியான நீ இந்தக் கலியில் நிகழ்கிற சில சம்பவங்களுக்காக லஜ்ஜை கொண்டு மனம் உழல்கிருய்... அஞ்ஞானத்தால் பிடிவாதத்தை வைராக்கியம் என்று நீ மயங்குகிருய். இந்தச் சூழ்நிலையில் நீ இருந்தால் இன்னும் துன்புறுவாய்... நீயும் உன் சகதர்மிணியும் காசியிலுள்ள நமது மடத்துக்குச் சென்று அங்கே சிலகாலம் மடத்துக் கைங்கரியங்களைச் செய்துகொண்டு இருக்கலாம் என்று தோன்றுகிறது. வருகிற சிவராத்திரிக்குள் நீ காசிக்குப் புறப்படலாம்...'' என்று ஸ்வாமிகள் மிக நிதானமாய் மனம் பேதலித்து நிற்கும் ஒரு குழந்தையை அரவணைத்து ஆறுதல் கூறுகிற மாதிரி மொழிந்த

ஆக்ஞையை சிரமேற் கொண்டு பணிந்து வணங்கி, ''தேவரீர் சித்தம் எமது பாக்கியம்'' என்று மகிழ்ச்சி பரவசமானார். ஸ்வாமிகள் சங்கரனைப் பார்த்தார்: 'குழந்தாய் அவனவனுக்கு அவனவன் மார்க்கம், நீயும் உன் தந்தையைத் தொடர்ந்து காசிக்கே போகிறாயா, அல்ல' என்று வினவுவது போல் சங்கரனின் கண்களில் அவர் பார்வை ஊடுருவி மனத்துள் பதிந்தது.

'எல்லா இடமும் ஒன்றே. எனினும் இந்த சந்நிதானத்தில் நின்று, இந்த சன்மார்க்க போதனைகளை ஜீவிதம் முழுவதும் செவியால் பருகி, நாவால் ஓதி, செயலால் ஒழுகி வரும் அனுபவம் தான் மேலான பாக்கியம் என்று அறிகிறேன். தந்தையும், தாயும்



ஞானமும் கல்வியும், வாழ்வும் பயனும் இங்கே கிட்டுவதுபோல் எந்த க்ஷேத்திரத்தில் கிட்டும்'' என்று அவன் யோசித்துக் கொண்டிருந்தான்.

அகல் விளக்கில் எண்ணெய் குறைந்திருந்தது. சங்கரன் அருகே இருந்த வெண்கலப் பாத்திரத்திலிருந்து எண்ணெயை அதில் வார்த்துத் திரியைத் தூண்டி விட்டான்.

ஸ்வாமிகளின் விழிகள் அவன் பால் திரும்பின...

'நீ இங்கேயே இரு!'

அகல் விளக்கின் சுடர் சாட்சியாய் நின்று எரிந்தது.

ஸ்ரீ மடத்தைச் சேர்ந்த அடியார்களிடம் விடைபெற்றுக் கொண்டு மகாலிங்க ஐயர் தனது மடிசஞ்சியில் வைத்திருந்த சங்கரனின் வஸ்திரங்களை எடுத்து அவனிடம் தந்தார். அவனை அங்கேயே விட்டுச் செல்வதில் அவருக்குப் பரமதிருப்திதான் என்றாலும் பாசம் யாரை விடுகிறது? சங்கரன் தெளிந்த மனத்தோடு ஒளி வீசும் முகத்தோடு அவரை நமஸ்கரித்துப் புன்முறுவலோடு எழுந்து நின்றான்: ''காசிக்குப் புறப் படறச்சே உங்க அம்மாவோடு வந்து பெரியவாளைத் தரிசனம் பண்ணிண்டுதான் போகணும்.. நோக்கு இங்கே இருக்கிறது திருப்



திதானே?'' என்று மகனைத் தழுவிக் கொண்டு கேட்டார் மகா லிங்க ஐயர்.

சங்கரன் மனத்துள் தாயை எண்ணி வணங்கினான். 'இது எனக்கு மிகவும் ப்ரீதியானது என்று அம்மா அறிவாள்' என்று முணகிக் கொண்டான். அப்பா திரும்பித் திரும்பி அவனைப் பார்த்துக் கொண்டே நடந்தார். பார்வையின் எல்லையில் அவர் மறைகிறவரை, மறைந்த பின்னும் அவர் சென்ற திசையை நமஸ்கரித்தவாறு நின்றிருந்தான் சங்கரன். அவன்



முழங்குகிறது. ஆற்றில் தண்ணீரும், அக்ரகாரத்தில் வேத அத்ய யனமும்தான் வற்றிப் போய்விட்டன. சங்கரலிங்ககேஸ்வரர் நெற்றியில் அப்பிய சந்தனத்தோடு எல்லாவற்றுக்கும் சாட்சியாய் நிற்கிறார்.

மகாலிங்க ஐயர் தன் குடும்பத்தோடு காசிக்குப் போனபின் சதாசிவ ஐயர் மட்டும் கொஞ்சநாள் அந்த வீட்டில் இருந்தார். ஆலயப் பிரவேசம் நடப்பதற்கு முன்னால் அவர் அக்ரகாரத்தைக் காலி செய்துவிட்டார். அப்போது குழந்தை தேவிக்கு எட்டு வயது. மகாலிங்க சாஸ்திரிகளுக்காக தாட்சண்யம் பார்த்துத் தயங்கிக் கொண்டிருந்த அக்ரகாரத்து மனிதர்கள் சதாசிவ ஐயரை சாதிப் பிரஷ்டம் செய்தார்கள். குழந்தை தேவியுடன் நோயாளி மனைவியையும் அழைத்து கொண்டு அவர் ஆஸ்ரமத்துக்கே குடியேறினர். ஆசிரமத்தில் அவரையும், அவர் மனைவியையும் ஒரு ரிஷியையும் ரிஷிபத்தினியையும் போல் போற்றினர் அனை வரும்.

இந்தச் சமாசாரங்களெல்லாம் அவ்வப்போது ஸ்ரீமடத் துக்கு வருகிற சிலர்மூலம் சங்கரன் செவியில் விழுந்தன. எல்

லாவற்றையும் அவன் எதிர்பார்த்தே இருந்தான். இப்படி எல்லாம் நடப்பதை யார் தடுக்க முடியும்?

அந்தக் காலத்தில் மகாலிங்க ஐயரோடு சேர்ந்து மிக மூர்க்கமாய் ஆலயப்பிரவேசத்தைத் தடுத்து நின்ற அர்ச்சகருக்குக் கடைசி நேரத்தில் தன்னைக் கைவிட்டு மகாலிங்கஐயர் காசிக்கு ஓடிவிட்டார் என்பதில் ஏற்பட்ட வருத்தத்தின் வடு இன்னும் உள்ளே இருக்கிறது. எனினும் அர்ச்சகர் வைராக்கியத்தோடு தனித்தே நின்றார். இப்போதும் நிற்கிறார். எல்லாம் கெட்டுப்போன இந்தச் சூழ்நிலையிலும் எல்லாவற்றையும் சமமாகப் பாவிக்கும் அத்வைத சித்தாந்தத்தின் அடையாளமாக, இவர் வயோதிகத்தால் கூன் விழுந்து இங்கு வாழ்ந்து கொண்டிருக்கிறார்.

வளைந்தால் என்ன? நிமிர்ந்தால் என்ன? இந்த மதம், இந்த மார்க்கம், இந்தநெறி, இந்தக் கலாசாரம், இந்த நம்பிக்கை — காலமாற்றத்துக்கும் அவரவர் பாண்டித்யத்துக்கும் ஏற்ப என்னபெயரில் இதனை அழைத்தாலும் — இது, சிரஞ்சீவியாய் வாழ்ந்து கொண்டிருக்கிறது! வாழும்.

இவர்களின் நாத்திகச் சீரழிவால் லோகம் முற்றாக அழிந்துவிடக் கூடாதே என்றுதான் தெய்வம் கூட — காதும் கண்ணும் அடைத்துப் போய்க் கிடக்கிறது! 'காதையும் கண்ணையும் அடைச்சிண்டா செத்துப் போயிட்டதா நினைக்கிறது எவ்வளவு மூடத்தனம்....எ ன்னமோ அறிவைப் பத்திப்பேசறாளே..' என்று முணகிக்கொண்டார் அர்ச்சகர். எங்கே இந்தச் சிவலிங்கத்தின் ஒற்றைக் கண் திறந்து லோகமே அழிந்து விடப்போகிறதோ என்ற காருண்யத்தினால் சந்தனத்தை அப்பிக் கொண்டிருக்கிறார் அவர். வேறு தீய மொழி ஏதும் சிவலிங்கத்தை அணுக வொண்ணாதவாறு ஈஸ்வரனுக்குப் பிரீதியான நாம சங்கீர்த்தனங்களைப் பொழிந்து கொண்டிருக்கிறார் அவர். என்ன நம்பிக்கை! இந்த நம்பிக்கையும், இவர் சிவலிங்கத்துக்கு வார்க்கும் இந்த நீரும், அள்ளிச்சொரியும் மலரும் உலகை ரக்ஷிக்கிறது என்று உறுதி கொண்டு அதிலேயே முழு வாழ்க்கை கண்ட அந்தச் சிவனடியார் இக்காலத்தில் என்ன மாதிரியான பேச்சுக்களை ஏச்சுக்களையெல்லாம் சகிக்கிறார்! கோயில் வாசல் முன்னாலேயே எழுதி வைத்திருக்கிறான்கள் . . . .

''பாவம் குழந்தைகள்! ஏதோ சிறுபிள்ளைத்தனமா தெய்வ தூஷணை செய்யறதுகள்! அதனாலே தெய்வம் இவாளைத் தள்ளி விடுமோ? என்னைக் கூட ஏதோ ஒரு அசட்டுப் பிராமணன்னு, கிறுக்கன்னு இந்தக் கொழந்தைகள் கேலி பண்றதுகள்... அது மாதிரி இந்தச் சிவலிங்கத்தைக்கூட ஒரு கல்லுன்னு நெனைச்சிண்டு இருக்குகள்... ஞானமும் அறிவும் மனுஷனுக்கு எவ்வளவு சொந்தமோ, இயல்போ, அதே அளவு அஞ்ஞானமும் அவனுக்குத் தானே சொந்தம்! இல்லையோ?... அக்கிரகாரத்தில் இருக்கிறவா கூட ரொம்பப் பேர் மனசு சலிச்சுக்கறா... அன்பில்லாத குழந்தைகளைப் பெத்தவாளும், நம்மை மாதிரி புத்திர பாக்கியமே இல்லாதவாளும்தானே போக்கத்துப்போய் இங்கேயே கெடக்கோம்னு இவகூட சொல்றா... ஏதோ இந்த வெங்கலப்பானைச் சோத்துக்குத் தான் இவ்வளவும்னு எல்லாருமே நினைக்கறா... இதிலே ஆஸ்திகாள் யார்? நாஸ்திகாள் யார்?

''இந்தப் பூமியிலே இந்த மாதிரி சிவலிங்கங்கள் எவ்வளவு இருக்கு தெரியுமோ? தோண்டித் தோண்டிப் பாருங்கோ! தெரியும்... இந்த வயசான காலத்திலும் மூச்சு இளைக்க இளைக்க இறைச்சுக் கொட்றேனே... அதன்பலன் லோகம்பூரா சிவலிங்கமா மொளைக்காதோ?... என்னை மாதிரி இதை அபிஷேகம் பண்ணிண்டு அர்ச்சனை பண்ணிண்டு எவ்வளவு பிராமணுள் இருக்காதெரியுமோ? நாஸ்திகாள் மாதிரி அவாளும் நடுத்தெருவிலே கூட்டம் போட்டுண்டு நிக்கணுமோ?... நின்னுட்டோம்னு அப்ப தெரியும் எங்க சேதி'' என்று ஊர் பார்க்க வந்தவர்களிடம் சொல்லி பார்தட்டிக் கொண்டார் அர்ச்சகர் அப்பையர். வந்தவர்கள் நன்றாய்த்தான் அவர் வாயைக் கிளறிவிட்டு விட்டார்கள் போலிருக்கிறது!

அப்பைய குருக்களின் நம்பிக்கை மிகவும் அர்த்தமுடையது. அது ஒளி மிகுந்த சத்தியத்தையும் இந்தப் பிரபஞ்ச சக்தி அனைத்தையும் ஒரு சிவலிங்கமாக வரித்து எதிரே நிறுத்திப் பேசிக் கொண்டிருக்கிறது. கானகத்தின் நடுவே ஒரு ரிஷி யாகம் இயற்றிக் கொண்டிருக்க அந்த யாகத்தில் பிறந்த ஒரு தேவன் அந்த ரிஷியின் கட்டளைக்குப் பணிந்து ஒரு நாட்டில் புகுந்து மாந்தர் வாழ்க்கையையே மாற்றுகிற, காரிய சாத்தியமற்ற கற்பனை பரப்பும் இதிகாச, புராண, மூட நம்பிக்கைக் கதைகள் சொல்லுமே அதற்கொப்ப, இந்த அப்பைய குருக்களின் தவம்—எண்ணிலடங்கா அப்பையர்களின் தவம் பலித்ததே போன்று ஆசார்ய சுவாமிகள் திக்விஜயம் நடத்துகிறார். ஒருகால் நூற்றாண்டுக் காலம் உச்சத்தில் இருந்த நாத்திக இருளைப் பிளந்து எழுந்த ஞான பானுவாய் ஸ்ரீ ஜகத்குரு சுடர்விடுவதை இந்தக் கலியுகம் கண்டு தரிசிக்கிறது! இருளில் அடைந்து கிடக்கும் இயல்பேயான இன்னிசைபாடும் பறவைகள் உதயத்தை உணர்ந்த மாத்திரத்தில் உற்சாகம் கொண்டு இசைபொழிவது போல் ஆத்திக அன்பர்கள் ஜயகோஷம் போடுகிறார்கள். வாழையடி வாழையாய் வந்து கொண்டிருக்கும் இந்தப் பரம்பரையில் இவரது காலம் அந்த ஆதி ஆசாரியாளின் காலத்துக்கு ஒப்ப இக்கலிகாலத்தில் சாதனை புரிந்து வருகிறது. இவர் போகும் இடமெல்லாம் கோயில்கள் எழுந்து பொற் கலசங்கள் மின்னுகின்றன. தேசத்தின் விதியை நிர்ணயிக்கின்ற பெரும் சக்திகளெல்லாம் பேசும் சக்தியற்று இவர் முன்னால் வந்து மௌனமாய் அமர்ந்து மறுகுகின்றன...

ஆசார்ய ஸ்வாமிகள் செல்லும் திசையெல்லாம் எதிர் கொண்டும், இருபுறமும், பின்தொடர்ந்தும் திருவிழாக்கோலம் பூண்ட ஜனத்திரள் பெருகிக் குழுமுகிறது.

ஸ்வாமிகள் யானைமீது அம்பாரிகட்டி ஆரோஹணித்து எங்கோ ஓர் ஊருக்குள் பட்டணப் பிரவேசம் செய்கிறார். பத்திரிகைகளெல்லாம் அந்த ஊரில் மகாசம்ரோட்சணம் நடக்கப் போகிற கோயிலைப் பற்றிய விருத்தாந்தங்களை, இந்தக் கைங்கரியத்தில் ஈடுபட்டிருக்கும் பிரமுகர்களைப் பற்றிய செய்திகளை உலகெலாம் பரப்புகின்றன; பிறநாட்டைச் சேர்ந்த, இந்தியாவின் பால் ஆன்மிக தாகம் கொண்ட ஆஸ்திக அன்பர்களையெல்லாம் இந்த சிற்றூரில் சேர்த்துவைக்க, படங்களும் கட்டுரைகளும் தீட்டி இந்தப் பெரும் பணிக்கு பேருதவி ஆற்றுகின்றன...

இந்தக் கோயில் கட்டி முடிக்கப்படுகிறவரை ஸ்வாமிகள் இங்கேயே முகாமிடப் போகிறார் என்ற செய்தி ஏற்கனவே ஜகப்பிரசித்தமாகியிருக்கிறது. முன்னேற்பாடாக போலீஸ்காரர்களும், அரசாங்க அதிகாரிகளும், பொதுப்பணித் துறையினரும், சாரணர்களும், சமூக சேவக சேவகிகளும், ஆஸ்திக சமாஜத்தினரும், அறநிலையக் காவலர்களும் இவ்வூரின்பால் தனிக் கவனம் செலுத்த நேர்ந்ததால் இக் குக்கிராமம் புதுச்சோபை கொண்டு திகழ்கிறது. உணவு விடுதிகளும், ஆத்திகப் பெருமக்களுக்குத் தங்கும் இடவசதிகளும் அமைக்கப்பட்டுவிட்டன. ஊரின் எந்தத் திசையில் திரும்பினாலும் 'ஜயஜய சங்கர' என்கிற கோஷம் பொழுதெல்லாம் ஒலிபெருக்கிகள்மூலம் பொங்கி வழிந்து கொண்டிருக்கிறது!

இவ்வளவுக்கும் மூலகாரணரான ஆசார்ய ஸ்வாமிகள், இங்கு திரண்டு நிற்கும் பெருங்கூட்டம் தரிசிப்பதற்கு வாய்ப்பாய் யானை மீது ஏறி, துவராடைக்குள் பொதிந்து, ஞானமும், கருணையும் ஒளிரும் தமது அருள் நோக்கால் அந்த ஜன சமுத்திரத்தை ஏறிட்டு நோக்க, வானைநோக்கிக் கும்பிட்டு உயர்ந்த கரங்களுடன் கூட்டமே 'ஜயஜய சங்கர' என்று சிலிர்த்து நிற்கிறது. ஒருவரின் விழியாவது அவரை ஏறிட்டு நோக்கவேண்டுமே! கூடிநிற்கும் மக்களைத் தமது பார்வையால் அவர் அநுக்ரகித்த அந்தக்ஷணத்தில் எல்லா விழிகளும் ஒன்றுபோல் மூடிக் கட்புலன் கடந்த கடவுளின் உருவை அகக்கண்ணால் கண்டு உருகி நிற்கின்றன போலும். அந்தப் பெருந் திரளின் நடுவேயிருந்து உயர்ந்தெழுந்து நேருக்கு நேர் வந்து நிற்பனபோல் இரண்டு விழிகளை அவர் ஒரு நொடியில் அடையாளங் கண்டு கொண்டார்.

''பகவன் முதற்றே உலகு'' என்ற குறளின் பாதி அடிகளை அவரது திருவாயின் செவ்விதழ்கள் முணுமுணுத்தன. இமைகள் பெரிதாய் விரிந்து அந்தக் கூட்டத்தைத் தாண்டி எங்கோ ஓர் ஓரத்தில் நின்றிருந்த அவன்மேல் பார்வையே குத்திட்டு நின்றது போல்...

எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்னால் கூண்டுவண்டியில் அமர்ந்து சங்கரபுரத்தைவிட்டு ஸ்ரீமடத்துக்கு மகாலிங்க ஐயருடன் பிரயாணம் போன அன்று காலை மூங்கில் பாலத்தின் மேல் பல்துலக்கிய குச்சியை ஓடுகின்ற நீரில் விட்டெறிந்து அது அமிழ்கிற வரை அதையே பார்த்துக் கொண்டிருந்த இரண்டு விழிகள் தன்னை நோக்கித்திரும்பாதா? என்ற ஏக்கத்துடன் தாம் மட்டும் பார்த்தவாறேயிருந்த, பார்வையிலிருந்து மறைந்துபோன அந்த ஆதியின் தோற்றம் மனத்துள் விரிந்தது... ஆசார்ய ஸ்வாமிகளின் தாமரை மலர்போன்ற நயனங்கள் மூடின: ''நான் எந்த நிலையிலிருந்தாலும், உன்னையே வணங்குகிறேன்''.

அவரது விழிகள் மலர்ந்தபோது, அந்தக்கண்கள் இரண்டும் தம்மை நோக்கி விரிந்து வருவனபோல் வெறித்து நிற்கக் கண்டார். யானையும் பரிவாரங்களும், சூழ்ந்துவரும் கும்பலும் பெருகிப் பெருகி விலகி வழியமைக்கிறது. ஆனால் அந்த இரண்டு விழிகள் அந்தப் பெருந்திரளை விழுங்கி எதிரே எதிரே தெரிந்து கொண்டே இருக்கின்றன...

பூர்வாசிரம பந்தங்களும், தொந்தங்களும் அணுகமுடியாத பீடத்தின் மீது பற்றறுத்து ஏறி அமர்ந்து விட்ட பரமயோகி அவர். எந்தப் பரம யோகியும் பூர்வாசிரமத்தின் பந்தங்களையும் தொந்தங்களையும்தான் விடமுடியுமே தவிர அவைபற்றிய நினை வின் அலைகளையும், அவற்றை நீந்திக் கரையேறிய நிகழ்ச்சிகளையும் மறந்துவிட முடியுமா என்ன? மாயவாழ்க்கையின் லீலைகளில் சிக்கி மதிமயங்கிப் போகிற சாதாரண மானுடர்கள் அவற்றை மறந்துவிடலாம். இம்பர் வாழ்வின் இறுதிகண்டு உண்மையின் இயல்புணர்த்திய சங்கர பீடத்தைச் சார்ந்த மகான்கள் அவற்றை மறந்துவிட முடியுமோ?

முரசங்கள் ஆர்க்கின்றன. தாரைகள் விம்முகின்றன. கொம்புகளும் குழலும் மத்தளமும் தாளங்களும் இன்னிசை பொழி கின்றன. இன்னொரு பால், பதாகைகளும், காவிக் கொடிகளும் தோரணங்களும் உயர்கின்றன. அந்த யானை அசைந்து அசைந்து வர அதன் மீதுள்ள அம்பாரி அழகுற இடமும் வலமும் ஆடுகிறது.

தன்னையே நோக்கியவாறு தொடர்ந்து வருகிற அந்தப் பார்வையை அம்பாரியில் அமர்ந்திருக்கும் ஸ்வாமிகள் முகம் திரும் பிப் பார்க்கிறார். ஒருமாட்டுத் தொழுவத்தைச் சார்ந்த வேலி யருகே அவன் நின்றிருக்கிறான். தம் உள்ளத்தில் நிரந்தரமாய் உறைந்திருக்கும் அந்த உருவத்துக்கும், கண்ணெதிரே நிற்கும் இந்த உருவத்துக்கும், எவ்வளவு வித்தியாசம்! தூய கத ராடையும், அரைக்கை சட்டையும் அணிந்து, இடுப்பில் சுற்றிய மேல்துண்டுடன் கரங்களைக் கூப்பிக்கொண்டு நிற்கும் அவனது விழிகளில் தமது பார்வை ஊடுருவி, அபயஹஸ்தம் காட்டி ஆசியளிக்கிறார் ஸ்வாமிகள். அவன் தலைகுனிந்து நமஸ்கரிக் கிறான்.

'ஸ்வாமி... என்னைத்தாங்கள் கண்டு கொண்டீர்கள்! தங்கள் அருள் நோக்கின் கிரணங்கள் என் மீது பாய்கின்றன...' என்று மனமும் உடலும் பரவசத்தால் சிலிர்க்கின்றன அவனுக்கு.

''நான் எப்போது உன்னைக் காணாதிருந்தேன்? காலமும் தூரமும் நம்மிடையே புகுந்தது இயற்கையால் நேர்ந்த இயல்பே ஆகும். நான் உன்னிடம் அல்லாமல் என்னுள்ளேயே சொல்லிக் கொண்டதெல்லாம் சாதாரண மனிதர்களின் பிரதிக்ஞை அன்று; அது ஓர் அனுபூதி. நான் கண்களை மூடும் தோறும் கடவுளை எண்ணும் தோறும் உன்னை வரித்துக் தொழுகிறேன். காலமும் தூரமும் உன்னை வெகுவாக மாற்றிக் கொணர்ந்து என் முன் நிறுத்திய போதிலும், என்னுள் இலங்கும் என்றும் இளமை பொருந்திய மார்க்கண்டேயனையே நான் தொழுகிறேன்!...

யானை அசைந்து அசைந்து நடக்க, அம்பாரி குலுங்கிக் குலுங்கி ஆட மறுபடியும் அவன் தமது பார்வையிலிருந்து மறை யும்வரை அவனை...

வரவேற்பு வளைவுகளும் வண்ணத் தோரணங்களும் அலங் கரிக்கும் அந்தப் பெருந்திடலில் ஜனக்கும்பல் நிரம்பி வழிகிறது. இன்னும் கட்டிமுடிக்கப்படாத புதிய கோபுரம் பின்னால் தெரி கிறது. திடலுக்கு அப்பால் ஓர் அழகிய தென்னஞ்சோலை; நடுவே ஒரு தாமரைக்குளமும், குளத்தின் கரையில் ஆசாரிய ஸ்வாமிகள்

மூகாமிடுவதற்கான குடிலும் பர்ணகசாலையாகக் காட்சி தருகின்றன.

அந்தக் குடிலுக்குப் பின்புறம் வேலியருகே ஒரு பவழமல்லி மரமும், அதனடியில் ஒரு மேடையும், மலர்கள் தூவப்பட்ட ஒரு பீடம்போல் காட்சி தருகிறது. அம்பாரியிலிருந்து இறங்கித் தனிமையில் இருக்க மனங்கொண்டவராய் அந்தப் பீடத்தில் போய் அமர்ந்து கொள்கிறார் சுவாமிகள். தொடர்ந்து வந்த பக்த கோடிகளின் ஆரவாரம் அடங்கிக் குடிலுக்கு வெளியே கூட்டம் நின்று விடுகிறது. வாசலில் யானை மட்டும் முகபடாம்ஜ்வலிக்க கால்மாற்றி அசைந்து நின்று ஆடிக் கொண்டேயிருக்கிறது.

வேலிக்கு அப்பால் அறுவடை முடிந்த வயல்வெளிகளில் ஆடுகள் மேய்ந்து கொண்டிருக்கின்றன.

மடத்தைச் சேர்ந்த தொண்டர்கள் ஒரு சிறு கூட்டமாய் அவரைக் குழுமிக் கைகட்டி நின்றிருக்கின்றனர். அவர் பார்வை தூரத்தில் மேய்கிற ஆட்டுமந்தையின் மீதே லயித்திருக்கிறது: ''கிருஷ்ணா'' என்று பகவன்நாமாவை ஜபிக்கிறாரா, அல்லது யாரையேனும் அழைக்கிறாரா என்று புரியாமல் தொண்டர்கள் ஒரு விநாடி மயங்கி நிற்க, ''அந்தக் கிருஷ்ணசாமி எங்கே?'' என்று திரும்பி இவர்களைப் பார்த்த போது, அதோ கிருஷ்ணசாமியே வருகிறான். தோளில் புஷ்பங்களும், தேங்காயும் கனக்கிற ஒரு பெரிய கூடையைச் சுமந்துகொண்டு மார்பில் வழியும் வியர்வையில் யக்ஞோபவீதம் புரள வேட்டியை வரிந்து கட்டிக்கொண்டு அவன் வந்தான். வந்த மாத்திரத்தில் தன்னை அவர் அழைப்பது அவனுக்குத் தெரிந்துபோயிற்று. கூடையை ஒருபுறம் இறக்கி வைத்துவிட்டு அவரருகே வந்து கைகட்டி வாய்பொத்தி பவ்யமாய் நின்று அவர் இடுகிற பணிக்கு காத்து நிற்கிறான்.

''கிருஷ்ணா''

''ஸ்வாமி'' அவனது மூச்சுக்காற்று வாய்மீது பொத்திய மூன்று விரல்களில் வெப்பமாய் இழைகிறது.

புன்முறுவலுடன் ஒரு குழந்தையைப் பார்ப்பதுமாதிரி அந்தக் கிருஷ்ணசாமியை அவர் நோக்கியபோது குறும்பு ஒரு புஷ்பம்போல் அவர் பார்வையில் மலர்ந்தது. ஆசாரியர்களும், தபசிகளும் ஹாஸ்யச்சுவைக்கு அப்பாற்பட்டவர்கள் அல்லர்.

''கிருஷ்ணா நீ இங்கேதானே இருக்கிறாய்? என்னுடன் தானே இருக்கிறாய்?'' என்று ஒரே விஷயத்தை இரண்டு கேள்விகளாய்க் கேட்க அவன் இரண்டுமுறையும் ''ஆம் ஸ்வாமி...ஆம் ஸ்வாமி'' என்று முணகிக்கொண்டே மரியாதையுடன் தலை குனிந்து நின்றான். ஸ்வாமிகள் மறுபடியும் சிரித்தார்: ''ஆனால் கூப்பிட்டால் தவிர உன்னைப் பார்க்க முடியாதுபோலிருக்கிறதே..'' என்று தலையுயர்த்திச் சுற்றிலும் நின்றிருந்த பிற தொண்டர்களைப் பார்த்தார். கிருஷ்ணனுக்கு இந்த விளையாட்டெல்லாம் அத்துபடியான விஷயம். தன்னை மாத்திரம் அங்கே நிறுத்தி வைத்துக் கொண்டு பிறரையெல்லாம் அவர் அனுப்பிவைக்கப் போகிறார் என்று அவனுக்குப் புரிந்தது. மறுபடியும் சிரிக்கிறார்: ''ஆனாலும் கிருஷ்ணா, உனக்குத் தான் ஸ்ரீமடத்தின் பொறுப்புக்கள் அதிகம். எப்போதும் நீ இப்படி ஏதேனும் கைங்கர்யத்தில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறாய். கர்ம

யோகிகளுக்கு அவர்கள் செய்கிற கர்மாவே தியானம், தபஸ் எல்லாம்... ஆசார்ய ஸ்வாமிகளைச் சுற்றி நின்று கொண்டிருப்பதைவிட அவரவர் கைங்கரியங்களை அவரவர் செய்து கொண்டிருப்பதே ஈஸ்வரனுக்குப் ப்ரீதியானதாகும்!'' என்று கூறியவாறு மறுபடியும் அங்குத் திரும்பிப் பார்த்தபோது அந்தத் தொண்டர்கள் நின்றிருந்த இடம் முற்றும் காலியாகி யிருந்தது!

''கிருஷ்ணு இந்தப்பக்கம் வா'' என்று சொன்னதும் 'கும்பிடும் பணிவும் போதும்' என்கிற அவரது குறிப்பை உணர்ந்து அவரெதிரே மார்பின்மேல் கைகளைக் கட்டியவாறே கிருஷ்ணன் நிமிர்ந்து நின்றான்.

''ராஜவீதியின் திருப்பத்தில் ஒரு குளம் இருக்கிறதே தெரியுமோ?''

அவன் மௌனமாக யோசித்தான்.

''அந்தக்குளத்துக்குப் பக்கத்தில் ஆடா தொடை செடிகள் முளைச்சவேலி..பார்த்த ஞாபகம் இருக்கா?'' அவர் உண்டு என்றால் அது இருக்கும் என்கிற நம்பிக்கையில் மறுபடியும், ''ம்'' என்றான்.

''அங்கே ஒரு மாட்டுத் தொழுவம் கூட உண்டு. உள்ளே தென்னங்கீற்று வேய்ந்த ஒரு பெரிய வீடும் உண்டு. என்ன? நான் சொல்லுகிற அடையாளம் உனக்குத் தெரிகிறதா?...''

''சொல்லுங்கள் ஸ்வாமி. போனால் நிச்சயம் தெரியும்''

''அங்கே நின்றிருந்தானே அவன்... அவனை நீயும் பார்த்தாயா?'' — தான் கண்ட காட்சியை எங்கேயோ பார்வை வெறிக்க ஒரு சித்திரம் போல் நினைவு கூர்ந்தவாறு சொன்னார் ஸ்வாமிகள்.

''மன்னிக்கவேணும், தாங்கள் யாரைச் சொல்லுகிறீர்கள் என்று எனக்கு விளங்கவில்லை'' என்று மனத்துள் முணகியவாறு குழம்பி நின்றான் கிருஷ்ணசாமி.

''உனக்கு என்னையே கவனிக்க நேரமில்லை, என்னைக் கவனித்திருந்தால் நீ அவனையும் பார்த்திருப்பாய். சரி, நீ அந்த வீட்டுக்குப் போய் அவனை நான் வரச் சொன்னதாக சொல்லி வரவேண்டும்''

''சித்தம்'' என்று அவரை மீண்டும் ஒரு முறை நமஸ்கரித்த பின் கிருஷ்ணன் புறப்பட்டான். வேலிப்படலைத் தாண்டி வெளியே வந்ததும் இடுப்பிலிருந்த மேல் வஸ்திரத்தை அவிழ்த்துப் போர்த்திக் கொண்டான். கீழ்ப்பாச்சாய் வரிந்து கட்டியிருந்த தட்டுச்சுற்று வேஷ்டியை அவிழ்த்து அணிந்து கொண்டான். அவனையே பார்த்துக் கொண்டிருந்த ஸ்வாமிகளின் விழிகள் திரும்பி ஆட்டு மந்தையின்பால் வெறித்தன....

## அத்தியாயம்—3

கிருஷ்ணன் இங்கு வரும்பொழுது அவர் தொழுவத்தில் பால்கறந்து கொண்டிருந்தார். வந்தவரை யாரென்று வினவாமல் முன்னமே இந்தக் கிருஷ்ணனை அறிந்தவர் போன்று முகம் மலர்ந்து, ''வாங்க சாமி வாங்க'' என்று வாய்நிறையப் பெருங்குரலில் கூவியழைத்தவாறு நுரைவழியும் பால்செம்பைக் கையி



லேந்திக் கொண்டு தொழுவத்திலிருந்து வெளிவந்தார் அவர். கையில் கனம் இருந்ததால் சிரம் மட்டும் தாழ்ந்து வணங்கிற்று.

பதிலுக்கு அவரை வணங்கிய போதிலும் 'இந்நபர் இந்த வீட்டின் எஜமானனு அல்லது பணியாளனு?' என்று நிதானிக்க முடியாத தன்னை ''வாருங்கள்'' என்று ஒருமுறை திரும்பிப் பார்த்து அழைத்து வீட்டுக்குள் செல்கிற அந்தத் தோரணையினுல் 'இவர் இந்த விட்டின் எஜமானர்தான்' என்று யூகித்துக் கொண்டான் கிருஷ்ணன்.

வீட்டின் முன்னுல் வரவேற்பறை மாதிரி நாலுபுறமும் திறந்த முன் கொட்டகையில் நிறைய நாற்காலிகளும், ஒரு மேஜையும், புத்தகபிரோவும், ஒரு வகுப்பறை மாதிரி இருந்தது.

கிருஷ்ணன் முன் கூடத்து அலங்காரத்தைப் பார்த்தவாறே நாற்காலியில் அமர்ந்தான். அங்கு சுவரில் மாட்டப்பட்டிருந்த படங்களைப் பார்த்து இந்த வீட்டு எஜமானைப்பற்றி ஒன்றும் நிதானிக்கக் கூடுவதாயில்லை.

காரல்மார்க்ஸ், காந்தி, ராமகிருஷ்ண பரமஹம்ஸர், விவேகானந்தர், வள்ளலார், ஆசார்யசுவாமிகள், கவிபாரதி, ஆகியோரின் நூல்கள் நிறைந்த ஷெல்ப்கள் இருந்தன. இவரைப் பற்றி ஒன்றும் தீர்மானிக்க முடியாமற் குழம்ப வைத்தன. ஒரு குழந்தைபோல் சிரித்தவாறு எதிரே தெரியும் ஜகத் குருவின் திருவுருவத்தைக் கண்டு ஓர் அன்பரின் இடத்தில் தான் நாம் இருக்கிறோம் என்கிற நம்பிக்கை பிறந்தது கிருஷ்ணனுக்கு.

''என் மனைவியார் உத்தியோகத்துக்குப் போய் இருக்கிறார் கள்'' என்று சொல்லிக் கொண்டே உள்ளேயிருந்து முன் கூடத்துக்கு வந்தபோது அவரது திறந்த மார்பைக் குறிப்பாகக் கண்டு இவர் ஒரு பிராமணராக இருக்கமுடியாது என்றும், ஒருவேளை நாஸ்தி கரோ? என்றும் எண்ணங்கள் கிருஷ்ணனின் மனத்துள் தோன்றின. அவரைப் பின் தொடர்ந்து வந்த இளம் பெண்ணைக் காட்டி, ''என்னுடைய மகள் — வேதவல்லி'' என்று அறிமுகம் செய்தவாறு மேஜைக்குப் பின்னாலுள்ள நாற்காலியில் வந்து அமர்ந்தார் அவர். அந்த பெண் கிருஷ்ணனுக்கு நமஸ்காரம் சொன்னாள். அவளது பெயரையும் ரூபத்தையும் பார்த்த கிருஷ் ணனுக்கு இது ஒரு பிராமணரின் வீடுதானோ? என்று மறுபடியும் ஓர் எண்ணம் தோன்றியது.

''என்ன விஷயமாய் வந்தீர்களென்று தெரிந்து கொள்ள லாமோ?'' என்று கேட்ட அவரைச் கிருஷ்ணன் ஒருமுறை வெறித்துப் பார்த்தான். எதற்காக வந்தோம் என்பதை அந்த விநாடி அவன் மறந்துதான் இருந்தான். அவன் உள்ளத்தை ஊடு ருவும் பார்வையோடு எதிரிலிருந்த ஸ்வாமிகளின் சித்திரம் அவன் பார்வையில் மறுபடியும் பட்டது. முதலில் தன்னை யாரென்று அறிமுகம் செய்து கொள்ளவேண்டும் என்று எண்ணினான் கிருஷ்ணன்.

''கிருஷ்ணசாமின்னு பேரு; ஸ்ரீமடத்தில்–ஒரு தொண்டன்' என்று சுய அறிமுகம் செய்து கொண்டான். அந்தப் பெண் மறு படியும் ஒரு முறை கிருஷ்ணனை நமஸ்கரித்தாள்.

''மங்களம் உண்டாகட்டும்'' என்று இந்தத் தடவை கிருஷ் ணன் அந்தப் பெண்ணை ஆசீர்வதித்தான்: ''படிச்சிண்டிருக்கயா கொழந்தே?'' என்று விசாரித்தான்.

''இல்லை; ரெண்டுவருஷத்துக்கு முன்னாலே எஸ்.எஸ்.எல்.சி. முடிச்சுட்டு சும்மாத்தான் இருக்கேன்'' என்றாள் வேதவல்லி. அப்போது வேலிப்படலைத் திறந்து கொண்டு கையில் குடை, பை சகிதம் அம்மா வந்தாள். உத்தியோகத்துக்குப் போயிருப்ப தாய்ச் சற்றுமுன் இவர் கூறிய இவரது சகதர்மிணியும், வேதவல்லி யின் தாயும் இவள்தான் என்று அறிந்துகொண்டு முறுவல் செய்த கிருஷ்ணசாமியைப் பார்த்துத் தன் கணவரின் நண்பர் என்று எண்ணிய அம்மாள் அவனுக்கு நமஸ்காரம் செய்துவிட்டு

உள்ளே போனுள். இந்நேரம் வரை உள்ளே அறையில் உறங்கிக் கொண்டிருந்த இரண்டு வயது குழந்தை உறக்கம் கலைந்து ''அப்பா அப்பா'' என்று அழைத்தவாறு வெளியே வந்தான். மேஜை அருகே உட்கார்ந்திருந்த அவர் குழந்தையின் குரல் கேட்டதும் எழுந்து வந்து அவனைத் தூக்கிக்கொண்டு போய் மடியில் இருத்திக் கொண்டார்: ''நான்தானே வீட்டிலேயே இருக்கேன், என் குழந்தைகளெல்லாம் அப்பா, அப்பா என்றுதான் அழும்! எல்லாம் ஒரு குறிப்பிட்ட வயசு வரைக்குந்தான்'' என்று அவர் முணகிக் கொண்டார்...

யார் என்றுகூடக் கேட்காமல் தன்னிடம் இவ்வளவு அன்யோன்யமாக பழகுகிற இவரிடம் தன்னைப்பற்றி இன்னும் ஏதேனும் சொல்லிக் கொள்ள வேண்டும் போல் இருந்தது கிருஷ்ணசாமிக்கு,

''உங்களுக்குச் சொந்த ஊர் எதுவோ?'' என்று அதற்கு வசதியாக அவர் கேட்டபோது 'வந்த விஷயம் என்னவோ?' என்று அவர் முதலில் விசாரித்ததற்கே தான் இன்னும் பதில் சொல்லவில்லை என்ற எண்ணத்துடன் இப்போது கேட்டதற்குப் பதில் சொன்னுன் கிருஷ்ணசாமி: ''சொந்த ஊர் திருவையாறு. என் தகப்பனுர் அந்தக் காலத்தில் ஜட்ஜா இருந்தவர். எனக்கும்கூட ஐ.ஏ.எஸ். செலெக்ஷன் ஆச்சு... எனக்கு இந்த உத்யோகம் ஆஸ்தி பூஸ்தி யெல்லாம் ஒண்ணும் சரிப்பட்டு வரலே... ஸ்வாமிகளின் உபதேசத்தைக் கேட்டுண்டு மடத்திலே பணிவிடை செஞ்சுண்டு இருக்கிற பாக்கியத்துக்கு நான் ஏங்கிண்டிருந்தேன்... பதினைந்து வருஷமா திருமடத்திலேயே இருக்கேன்... வருஷத்துக்கு ஒருதடவை காசிக்குப் போவேன்.... இப்ப நாலு வருஷமா ஸ்வாமிகளோடேயே இருக்கும்படியான பாக்கியம்; இப்ப திக்விஜயம் போனுளே அப்போ அவரைப் பின் தொடர்ந்து நானும் நடந்துண்டே இருந்த ஆனந்தம் ஒண்ணு போறும்... வேறு என்ன வேண்டியிருக்கு இந்த ஜீவிதத்திலே'' என்று தன்னை மறந்து பேசிக் கொண்டிருந்தான் கிருஷ்ணசாமி.

'என்ன உன் கதையை ஆரம்பிச்சுட்டே?' என்று இவனைக் கேட்பதுபோல் படத்திலிருந்து ஆசார்யசுவாமிகள் சிரித்துக்கொண்டிருந்தார்.

''ஸ்வாமிகள்தான் இந்த வீட்டுக்கு அடையாளம்சொல்லி அனுப்பினுர். அவ்விடம் தாங்கள் வரவேண்டும் என்பது ஆக்ஞை'' என்று கிருஷ்ணசாமி மிக உற்சாகத்துடன்கூறி அவரது சம்மதத்தை எதிர்பார்த்தான். அவன் அதிர்ச்சி அடையத்தக்க விதமாய் அவர் தலைகுனிந்து மௌனமானுர். அந்த மௌனம் ஓர் அவமதிப்பு என்றோ அபசாரம் என்றோ வந்திருப்பவர் புரிந்து கொண்டு விடக் கூடாதே என்ற அடக்கத்துடன் அவர் சொன்னுர்: ''ஆசாரிய சுவாமிகளின் தெரிசனத்துக்காகக் கோடாநுகோடி ஆத்மாக்கள் தவம் கிடக்கின்றன.... அவர் திருமுக தரிசனம் கிட்டாதா என்று ஏங்கியவர்களில் நானும் ஒருவன்; என் குடும்பத்தினருக்கும் எனக்கும் நேற்று அந்த பாக்கியம் கிட்டியது... ஆனுல் இப்போது அவரிடமிருந்து வந்திருக்கிற ஆக்ஞையை நிறைவேற்ற முடியாதவனுயிருக்கிறேன்.... சுவாமிகளின் அருளுரைகளையும், ஆக்ஞை

களையும் நானும் என் குடும்பத்தினரும்...'' என்று சொல்ல வந்ததை நிறுத்திவிட்டு உள்ளே பார்த்தார். மகள் நின்றிருந்தாள்; மனைவி இங்கு நடக்கிற சம்பாஷணையைக் கவனித்துக் கொண்டிருக்கிறாள் என்று மனத்துக்குப் புரிந்தது....

''குடும்பத்தினர் என்று சொல்லும்போது எனது மூத்தமகன் நினைவு வருகிறது...'' என்று நிறுத்தினார் அவர்.

''என்ன அவனுக்கு?'' என்று கேட்டான் கிருஷ்ணன்.

''அவனுக்கென்ன? அரசாங்க உத்தியோகத்தில்தான் இருக்கிறான். நான்தான் அவனை வீட்டைவிட்டு வெளியேற்றிவிட்டேன்... அது போகட்டும், ஆசாரியசுவாமிகள் சகலமும் அறிந்தவர்... என்னை அவர் இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகு இந்தப் பெரிய ஜனசமுத்திரத்தின் நடுவே அடையாளம் கண்டு கொண்டாரே!... அந்த சர்வக்ஞருக்கு நான் ஏதும் அறிவித்து நீங்கள் அறிவிக்க வேண்டுவதில்லை. ஆனாலும் நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும் எனபதற்காகச் சொல்லுகிறேன். நான் ஒரு ஹரிஜன்..!'' என்றதும் கிருஷ்ணனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. ஆரம்பத்திலிருந்தே இங்கு என்னமோ வித்தியாசமாகத் தோன்றியதன் ரகசியம் இப்போது துலங்கிற்று. இருந்தாலும் சமாளித்துக் கொண்டான்:

''இந்தக் காலத்தில் அந்தக் கொடுமையெல்லாம் எவ்வளவோ தீர்ந்து போச்சே'' என்று லோகயதமாகப் பேசினான்.

''எங்களை மட்டும் பார்த்துவிட்டு இந்த முடிவுக்கு வருவது சரியில்லை. அந்தக் கொடுமை இன்னும் இருக்கிறது. அது ஒரு கொடுமையாகவும், அதேசமயத்தில் ஒரு சலுகையாகவும் இக்காலத்தில் ஆகி இருக்கிறதே.. என் மூத்தமகனை நான் ஏன் வீட்டை விட்டு வெளியேற்றினேன் என்று நீங்கள் கேட்கவில்லையே!''

கிருஷ்ணன் ரொம்பவும் குழம்பிப் போயிருந்தான். ஸ்வாமிகள் சோதிப்பது தன்னையா? இவர்களையா? என்று அவனுக்குப் பிடிபடவில்லை. ஆயினும் இது ஒரு சோதனைதான் என்று அவன் மனம் குழம்பியது. ஸ்வாமிகளைக் கண்படைத்த அனைவரும்தான் தரிசனம் செய்கின்றனர். எல்லா மனிதர்களின் நலன் பொருட்டும் தியானம் செய்து கொண்டிருப்பவர் அவர். எனினும் திருமடத்துக்குள் அந்தரங்கமாக ஆசார்ய ஸ்வாமிகளின் சன்னதியில் ஒரு ஹரிஜனைக் கொண்டுபோய் நிறுத்துவது சாத்தியமோ? ஆசார சீலர்களாய் அவரைச் சூழ்ந்திருக்கும் அடியார்களுக்கு அதனால் ஏற்படும் குழப்பங்களை அவன் எண்ணிப்பார்த்தான். அதற்காக அஞ்சி,இந்த மனிதரைப் பற்றித் தான் அறிந்ததை வெளியிடாமல் மறைத்துக் கொள்வது முறைகெட்ட செயலாகும்... இந்நிலையில் தான் என்னசெய்வது? சரி, இவரிடம் 'ஸ்வாமிகள் உம்மை வரச் சொன்னார்' என்று அறிவித்ததோடு எனது கடமை முடிந்தது. இனி மேல் இவர்பாடு, அவர்பாடு. என்றாலும் 'தாங்கள் அடையாளம் சொல்லி அழைத்த வரச் சொன்ன மனிதர் ஒரு ஹரிஜன்' என்கிற விஷயத்தை ஸ்வாமிகளிடம் சொல்லிவிட வேண்டும் என்கிற பதைப்புடன் அவன் எழுந்து நின்று அவரிடம் விடைபெற்றுக் கொள்வதற்காகக் கைகளைக் கூப்பியவாறே சொன்னான்: ''ஐயா, உங்களை மாதிரி எல்லாரும் உயர்ந்துட்டா நமது

சமூகத்திலே ஜாதிபேதம் ஒழிஞ்சிடும். ஆனு நீங்க சொல்ற மாதிரி இன்னும் அந்தக் கொடுமை இருந்துண்டுதான் இருக்கு. பெரியவா உங்களேயோ என்னேயோ ஒருவேளே எல்லாரையும்தானே சோதிக்கத் திருவுளம் கொண்டிருக்கார்னு தோணறது. அந்தச் சோதனேயின் முடிவு லோகக்ஷேமமாகவே இருக்கும். அவர் சொன்னதைத் வந்து உங்களிடம் சொன்ன மாதிரியே நீங்கள் சொன்னதை அவரிடம் போய் சொல்லவேண்டியது என்கடமை. ரொம்பநாழி இருந்து ரொம்ப விஷயங்களேப் பேசிட்டோம். இப்ப நான் புறப்படறேன்'' என்று வேதவல்லியின்பால் திரும்பி ''குழந்தே நான் வரட்டா... அம்மாவைக் கூப்பிடு'' என்றதும் வீட்டு அம்மாள் வெளியே வந்தாள்.. அவளுக்கும் ஒரு நமஸ்காரம் சொல்லி அவன் வெளியில் வரும்பொழுது நேரம் இருண்டிருந்தது.

வேதவல்லி அரிக்கேன் விளக்கைக் கொண்டுவந்து கொட்டகையின் நடுவில் தொங்குகிற கம்பியில் மாட்டினுள். விளக்கடியில் நிழல்வட்டம் பெரியதாய் விழுந்தது. மேஜையின் மீது முழங்கைகளே ஊன்றி, கோர்த்த விரல்களின் மேல் முகவாயைப் பதித்து வேதவல்லியையே பார்த்தவாறு உட்கார்ந்திருந்தார் அப்பா. அம்மா கூடத்துக்கு வந்து ஒரு நாற்காலியில் உட்கார்ந்தாள். அவர் மடியிலிருந்த குழந்தை இறங்கி அம்மாவிடம்போய் உட்கார்ந்து கொண்டது. குழந்தையை மடியில்கிடத்தித் தட்டிக்கொண்டே அம்மா அவரிடம் பேசினுள்: ''நீங்க அவ்வளவு தீர்மானமா வரமுடியாதுன்னு அவரிடம் சொல்லியிருக்க வேண்டாம்''.

''நான் அப்படியா சொன்னேன்?...வேதம்'' என்று மகளே சாட்சிக்கு அழைத்தார். கையிலொரு புத்தகத்தோடு வந்த மகளிடம் கேட்டார்: ''நீ இங்கதானே இருந்தே? நான் வரமாட்டேன்னு அவரிடம் மறுத்துச் சொன்னேனு?''

வேதவல்லி நடந்ததைப் புரிந்து கொண்டு நியாயத்தை விளக்கிச் சொன்னுள்:

''அப்பா வரமாட்டேன்னு சொல்லலே; நான் ஒரு ஹரிஜன்னு அப்பா சொன்ன உடனே வந்தவர் முழுக்கப் பின் வாங்கிட்டாரம்மா. அவர் சொன்ன மாதிரி இது அவருக்கே ஒரு சோதனேதான். அவர் இதைப் போய்ப் பெரியவாகிட்டச் சொல்லுவார். அதுக்கு அவர் என்ன சொல்றூர்னு பார்ப்பமே.. வந்ததிலேருந்து நம்மைப்பத்தி 'இவா என்ன ஜாதியோ'ன்னு அவர் கொழம்பிண்டுதான் இருந்தார். அவர் கிட்ட அப்பா சொல்லிண்டது சரிதான்னு எனக்கும் தோணறது'' என்று தனக்குச் சரியாக சாட்சி சொல்லும் மகளே மனத்துள் பாராட்டிக் கொண்டார் அப்பா. அம்மாள் அதற்கு மேல் பேச்சை வளர்த்தாமல் ஒரு கட்டு நோட்டுப் புத்தகங்களேக் கொண்டுவந்து திருத்த ஆரம்பித்தாள்.

''பசுவுக்குத் தீனி வைக்கணும்'' என்று சொல்லிக் கொண்டே அப்பா எழுந்து தொழுவத்துக்குப் போனூர்.

முன்னிரவு நேரத்தில் மங்கிய நிலாவெளிச்சத்தில், பவழ மரத்தடி பீடத்தில் சுவாமிகள் தியானத்தில் அமர்ந்திருந்தார். வேலிக்குப் பின்னால் ஓடுகிற வாய்க்கால் நீரில் மூளியாய் நிலாத் துண்டம் விழுந்து கிடந்தது. கரையோரச் செடிகளின் மேல் மின்மினிப் பூச்சிகள் மின்னின.

''கிருஷ்ணா'' என்று அழைத்தபோது கைகளைக் கூப்பிய வாறு அவன் அவரருகே தோன்றினான்.

''என்ன? நான் சொன்ன அடையாளம் சரியாய் இருந் ததா? அவனைப் பார்த்தாயா? அவன் எப்படிப்பட்ட ஆள் என்று உனக்குத் தெரிந்ததா? நான் வரச் சொன்னேன் என்று சொன் னதும் அவன் என்ன சொன்னான்? நான் அவனை அடை யாளங் கண்டு கொண்டதை அறிந்து ரொம்பவும் ஆச்சரியப் பட்டானோ?'' என்றெல்லாம் ஒரு குழந்தைபோல் குதூக லித்துக் கேள்விகளைக் கேட்டார் சுவாமிகள்.

''ஆம் ஸ்வாமி, எல்லாம் தாங்கள் சொன்னபடியே...'' என்று ஆரம்பித்து, தான் போனபோது அவன் மாட்டுத் தொழு வத்தில் பால் கறந்து கொண்டிருந்ததையும், தேவி காமாட்சியே போல் மாநிறம் கொண்ட வேதவல்லி என்கிற ஓர் அழகிய மகள் அவருக்கிருப்பதையும், ஹிந்திப் பண்டிதையாக உத்தியோகம் பார்க்கிற—பார்த்தமாத்திரத்தில் ஒரு பிராமண ஸ்திரியோ என்று எண்ண வைக்கும்—அவரது பாரியாளைப் பற்றியும், பல வருஷங்கள் இடைவெளிக்குப் பிறகு இப்போது இரண்டு வயதில் தளர்நடை போட்டுக் கொண்டு வீட்டில் வளையவரும் ஒரு கிருஷ்ண விக்கிரகத்தைப் பற்றியும், ஏதோ மனஸ்தாபம் கொண்டு வீட்டைவிட்டு விலகி இருக்கும் மூத்த மகன் பற்றியும் சாங்கோபமாங்கமாக அவரிடம் விவரித்தான். கடைசியில் என்னவோ சொல்ல ஆரம்பித்து அதைச் சொல்லவும் முடியாமல், கும்பிட்ட கைகளைக் குழைத்துக் கொண்டு நின்றான் கிருஷ்ணன்: ''பழைய கதையையும் சொன்னார், ஸ்வாமி.''

''ஓ, அவனும் என்னை அடையாளம் கண்டுகொண்டானோ?'' என்று தனது அதிசயத்தை அவர் வெளியிடுவதற்கு முன்னால் அதைத் தடுப்பதேபோன்று கிருஷ்ணசாமி கூறினான்: ''பூர் வாசிரமத்தில் அவன் ஒரு ஹரிஜனும்'' என்று கிருஷ்ணன் கூறவும் ஏதோ ஹாஸ்யம் கேட்டது மாதிரி ஸ்வாமிகள் சிரித்தார்.

''அவன் மட்டும் ஹரிஜன்.. மற்றவர்களெல்லாம் சிவஜனோ'' என்று கிண்டல் பண்ணிவிட்டு, ''சரி வேறென்ன சொன் னான் சொல், பழைய கதை? அவன் பெயர் என்ன? ஆதிதானே?'' என்று ஆர்வமாய் வினவினார். ஏதோ குற்றம் புரிந்தவன் போல் கிருஷ்ணன் உடல் குறுகிப் பணிந்து கும்பிட்டான். தான் அவரது பெயரையோ, அவரது மனைவியின் பெயரையோ, அவர்களைப் பற்றி வேறு எந்த விருத்தாந்தங்களையோ கேட்காமல், தன்னைப் பற்றி ஏதேதோ பிதற்றிக் கொண்டிருந்தது நினைவுக்கு வர, அவனுக்கு உள்ளூர வெட்கமாய் இருந்தது.

ஸ்வாமிகளே சொன்னர்.. ''அவன் தன்னை ஒரு ஹரிஜன் என்று சொன்னவுடனேயே உனக்கு நிலைதடுமாறிப் போயிருக்கும். மயக்கம் போட்டிருப்பாய். அவனை அழைத்து வரச் சொன்னால், அரையும் குறையுமாய் அறிந்து கொண்டு வந்து நிற்கிருயே'' என்று பரிகாசமாகவே அவர் பேசினர். அதை ஒரு சிட்சைபோல் கருதிய கிருஷ்ணன் கண்கலங்கிப் போனன்.

''ஸ்வாமி, என்னை மன்னிக்க வேண்டும். அவன் தன்னைப் பற்றி அப்படிச் சொல்லிக் கொண்டதும் இங்கே என் பொறுப்பில் அவனை அழைத்துவர என் மனம் இடங் கொடுக்கவில்லை. அந்த உண்மையை மடத்தைச் சேர்ந்தவர்களிடம் மறைத்து அவனை அழைத்து வந்து விடலாமா? என்று கூட நான் நினைத்தேன். ஆனல் அது ஒரு பெரும் பிழையாக முடியும். அதனல் தான் மறுபடியும் தங்கள் ஆக்ஞையைப் பெற்றுப் போக வந்தேன். நான் சமாதானம் கூறவில்லை. செய்து விட்ட பிழையை க்ஷமிக்க வேணும்..''

''கிருஷ்ணு இந்தப் பக்கம் வா'' என்ருர். நிலாவெளிச்சத்தில் அவர் எதிரில் வந்து நின்ருன் கிருஷ்ணன்.

''உன் மீது ஒன்றும் பிழையில்லை கிருஷ்ணு. தயக்கம் அவனுக்குத்தான் முதலில் ஏற்பட்டிருக்கிறது. பிறகு அது உன்னிடத்திலும் பிரதிபலித்திருக்கிறது. தயக்கம், குழப்பம் என்றெல்லாம் உங்களுக்கு வந்துவிட்ட பிறகு உபாயம் சொல்வதற்குத்தானே நானிருக்கிறேன்! நான் பாட்டில் எங்கேயாவது கிராமத்தில் ஏகாந்தமாக இருந்துகொண்டு, பூஜையைப் பண்ணிக்கொண்டு, தியானம் செய்துகொண்டு, நிம்மதியாக இருந்தால் என் காரியம் நிறைவேறிவிடும். இந்த மாதிரி திக்விஜயமும் தேச சஞ்சாரமும் பட்டணப் பிரவேசமும் எதற்கு என்று நினைக்கிருய்? நமது மடம் நடப்பதற்கு பணம் வேண்டுமென்பதில்லை. பணபலம், ஆள்பலம் எல்லாம் ரொம்பக் குறைச்சலாக இருப்பதுதான் நமக்கு அழகு. பரிவாரம், சிப்பந்திப் பட்டாளங்கள், யானைமீது அம்பாரிகட்டி ஊர்கோலம், எனக்குக் கனகாபிஷேகம், பீடாரோஹண உத்ஸவம் இதெல்லாம் எதற்காம்? இந்த மடத்தின் அதிபதியாக இருக்கப் பட்டவரின் பலம் இதெல்லாமா? ஒருபோதும் இல்லை. கிருஷ்ணு, அவருடைய யோக்யதைதான் இந்த மடத்திற்கு சர்வ சக்தியாகும். நமது ஜனங்களிடம் அந்த யோக்யதா பலம்தான் குறைந்து வருகிறது. ஜாதிகள் அழிவதுபற்றி எனக்குக் கவலையே இல்லை. லோக க்ஷேமம் போகிறதே என்று நான் மிகவும் கவலைப் படுகிறேன். வேதரட்சணம் விட்டுப் போனல் இந்தப் பரம்பரையை மறுபடியும் உண்டு பண்ணமுடியாது என்று கவலைப்படுகிறேன். வேதத்தை பிராமணன் விட்டதால்தான் இன்றைக்கு லோகத்திலுள்ள இத்தனைக் கோளாறுகளும், விபரீதங்களும், கஷ்டங்களும் ஏற்பட்டிருக்கின்றன. வேதரட்சணத்தை ஜீவிதமாக ஏற்று வாழ்கிற ஒருவன் பிறவியால் எந்த குலத்தைச் சேர்ந்தவனுயிருந்தால் என்ன? என்றுகூடத் தோன்றுகிறது. நான் உனக்கு அடையாளம் காட்டினேனே அவன் அப்படிப்பட்ட ஆசான். அவன் பிறப்பால் ஹரிஜனுயிருப்பது பரமேஸ்வரன் ஒரு தோற்றத்தில் சண்டாளனுய்க் காட்சி தந்ததுபோல... சரிசரி... அவனை வரச்சொல். எப்படியேனும் வரச்சொல்'' சற்று நேரம்

மௌனமாய் வாய்க்காலில் விழுந்திருந்த நிலவைத் தேடி அது கரையேறி விட்டதால் வானத்தைப் பார்த்தார் ஸ்வாமி.

''புருஷனை இழந்த பெண்கள் நம்மை தரிசனம் செய்ய வரலாகாது என்றிருந்த ஒரு பழக்கத்தை நாம் சமீபத்தில் மாற்றியிருக்கிறோம் அல்லவா? ஒரு குழந்தையைத் தூக்கிக்கொண்டு அவர்களையும் தரிசனத்துக்கு வரலாம் என்று ஆக்கியிருப்பது எவ்வளவு குற்றம் நீங்கிய உபாயமாக பலனளித்திருக்கிறது என்று நீ பார்க்க வில்லையா? இதோ பகலெல்லாம் நான் இங்கே உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். வேலிக்கப்பால் ஆடுகளும் மாடுகளும் மேய்கின்றன. ஆடுமாடு மேய்க்கிறவர்கள் அங்கேயே நின்று என்னைப் பார்த்துத் தலைக்குமேல் கைகளை உயர்த்தி எனக்குக் கும்பிடு போடுகிறார்கள். அதுபோலவாவது.. நீதான் சொன்னாயே, அவன் வீட்டில் பசு மாடுகள் இருக்கின்றனவென்று. ஒரு பசு மாட்டைப் பிடித்துக் கொண்டு இதோ வேலிக்கப்பால் இந்தப் பக்கம் வரச் சொல்லேன் கிருஷ்ணா! நானும் அவனும் சந்திக்க வேண்டும். அதுதான் பிரதானம்... என்ன, இந்த உபாயம் சரிதானே?'' என்று இவ்வளவு நேரம் பார்த்துக் கொண்டிருந்த நிலவின் குளுமையை எல்லாம் கிரகித்துக் கொண்டதே போன்ற விழிகளால் கிருஷ்ணனைப் பார்த்துப் புன்னகை செய்தார் ஸ்வாமிகள்.

வீட்டின் முன்புறமுள்ள கொட்டகையில் தரையில் பாய் விரித்து அமர்ந்து ராட்டையில் நூல் நூற்றுக் கொண்டிருந்தார் ஆதி. இடுப்பில் குழந்தையுடன் வந்த அவர் மனைவி தன்னை அவர் பார்க்கிறவரை மௌனமாய் நின்றிருந்தாள். முதலில் அவர் அவள் பாதங்களைப் பார்த்தார். ராட்டையைச் சுழற்றியவாறே அவர் முகம் நிமிர்த்திப் பார்த்தபோது அவள் இடுப்பிலிருந்த குழந்தையை இறக்கிக் கீழே விட்டுத் தானும் அவரெதிரே அமர்ந்தாள். ராட்டையின் சுழற்சி நின்றது:

''நானும் குழந்தைகளுமா ஆசார்ய ஸ்வாமிகளைப் போய் தரிசனம் பண்ணிட்டு வரலாம்னு நினைக்கிறேன்... இந்த ஊருக்கு அவர் விஜயம் பண்ணப் போறார்னு கேட்டதிலிருந்தே எனக்கு அப்படி ஒரு பிரார்த்தனை.'' என்று அனுமதி கேட்கிற பாவனையில் சொன்னாள் அம்மா.

''தாராளமாகப் போய் வரலாமே; நானே சொல்லலாமென்று இருந்தேன். நீங்களாகவே விரும்பினால் அது இன்னும் உத்தமமாக இருக்கும்னு காத்திருந்தேன்'' என்றார் அவர். மனைவியை நீங்கள் என்று மரியாதையாக அழைக்கும் பழக்கத்தை அவர் ஆரம்பகாலம் முதல் கைக்கொண்டிருக்கிறார். அப்போது அங்கு வந்த வேதவல்லி, அம்மாவிடம் சொன்னாள்:

''அம்மா, நீங்க பெரியவாளைப் பார்க்கப் போறபோது மடிசார் வச்சிக் கட்டிண்டுப் போனாத்தான் பொருத்தமா இருக்கும்... ஏன், உங்களுக்கு என்ன அதிலே கூச்சம்?'' என்று மேலே ஏதோ பேச ஆரம்பித்த மகளை,. ''கூச்சம் இல்லேம்மா, எனக்குப் பழக்கமே இல்லையே'' என்று தயங்கினாள் அம்மா.

மகளைப் பாராட்டும் முறையில் சிரித்தார் அப்பா. ''எனக்குக்கூட உங்களை அப்படிப் பார்க்கணும்போல ஆசையா இருக்கு'' என்று மனைவியின் பக்கம் திரும்பிச் சிரித்துக்கொண்டே கூறினார். அம்மா எப்போதும் இல்லாத மாதிரி வெட்கப்பட்டு முகம் சிவந்து போனாள்.

''நல்ல வேடிக்கையாத்தான் இருக்கும்... அந்த மாதிரிக் கட்டிண்டுடறதுக்கு இந்தப் புடவை காணாது'' என்று சொல்லிக் கொண்டே எழுந்தாள் அம்மா.

''உங்க அம்மாவோட புடவைன்னு ஒரு பட்டுப் புடவை வச்சிருக்கோமே, அதைக் கட்டிக்கொண்டு போகலாமே'' என்று உற்சாகமாய்க் கையைத் தட்டிக்கொண்டு யோசனை சொன்னாள் வேதம்.

''என்னத்துக்குப் போயி இப்ப அந்தப் பழசையெல்லாம் கிளறச் சொல்றே? அந்தப் புடவை, பட்டு மட்கினால் பெட்டியிலேன்னு மக்கிப் போயிருக்கும்'' என்று சொல்லிக்கொண்டே அம்மா உள்ளே போனாள்.

'பழசைக் கொஞ்சம் கிளறித்தான் பார்த்து விடுவோமே' என்று மனசுக்குள் முணகிக் கொண்டே ராட்டையைச் சுழற்ற ஆரம்பித்தார் அப்பா.

''நமஸ்காரம்'' என்று மிகவும் அன்னியோன்யமான முறையில் குரலெழுப்பியவாறு வேலிப்படலைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்தான் கிருஷ்ணசாமி.

''வரணும் வரணும்'' என்று ராட்டை சுழற்றியவாறு கொட்டகையிலிருந்து இவனை எதிர்பார்த்தவர் போன்ற உற்சாகத்துடன் வரவேற்றார் ஆதி. இவர் நூல் நூற்பதை வேடிக்கை பார்த்தவாறே சிமெண்ட் தரையில் மேல்துண்டால் தூசு தட்டி தூணோரம் அமர்ந்தான் கிருஷ்ணன்.

''கிருஷ்ணன் தூது படலம் இன்னும் முடியவில்லை;ஸ்வாமிகள் மறுபடியும் என்னைத் தூது விட்டிருக்கா... ஏண்டா அஜமே! அவாளை அழைச்சிண்டு வரச் சொன்னேனா? அவாளை யார்? எவர்னு கேட்டுண்டு வரச் சொன்னேனா? அப்படித்தான் கேட்டாயே, ஊரைக் கேட்டாயா? பேரைக் கேட்டாயா? உன்னைப்பத்தி ஐ.ஏ.எஸ். பாஸ் பண்ணப் பெருமையை யெல்லாம் சொல்லிட்டா யோன்னு வாயாலே கேழ்க்காத குறை போங்கோ...''

''சுவாமிகள் என்ன சொன்னார்னு சொல்லுங்கோ'' என்று ஆர்வத்துடன் கேட்டார் ஆதி.

''என்ன சொன்னார்? உங்களைப் பத்தி 'அவர் ஒரு ஹரிஜன்'னு சொன்னேன்... மத்தவன்லாம் சிவஜனோ என்று பரிகாசம் பண்ணினார்'' என்று சொல்லிக் கிருஷ்ணன் சிரிக்க, ஆதியும் உரத்த குரலில் சிரித்தார்.

''நீங்க சிரிக்கிறேள். நேத்திக்கு அவர் முன்னாலே எனக்குக் கை காலெல்லாம் உதற ஆரம்பிச்சுடுத்து. 'நேக்குக் கனகாபிஷேகம் எதுக்கு? யானை மேலே அம்பாரி கட்டி ஊர்கோலம் போற

தெல்லாம் எதுக்கு? ஒரு மடத்துக்கு அதிபதியா இருக்கிறவரோட யோக்யதைதாண்டா மூலபலம். அப்படி ஒரு யோக்யவான் அவர்" என்று உங்களைப் பத்தி ரொம்ப உசத்தியாச் சொன்னு'' என்று கிருஷ்ணசாமி சொன்னதைக் கேட்டு மார்புக்கு நேரே இரண்டு கைகளையும் கூப்பி, ''சத்குரு'' என்று முணகிக் கொண்டார் ஆதி.

''எனக்கிருந்த அஞ்ஞானத்தைப் பாருங்கோ... எல்லாம் தெரிஞ்ச அவாள், இடத்தையும் காட்டி அடையாளமும் சொல்லி அனுப்பிச்சா, நான் பார்த்துட்டுப்போயி ஆள் குட்டையா இருக்கான், உசரமா இருக்கான்னு சொன்னு எப்படி இருக்கும்? நேக்கு அவரைப் பார்க்கணும் அதுதான் முக்கியம்னுர்... மறுபடியும் போடா'ன்னு விரட்டினுர். வந்திருக்கேன்'' என்று கையைக் கூப்பிக்கொண்டு கூறினுன் கிருஷ்ணன்.

''அது எப்படி சாமி முடியும்?'' என்று புருவததைத் தேய்த்துக் கொண்டு யோசித்தார் ஆதி:

''சாமி, ஒரு சேரிக்குள் நுழைவதற்கு உங்களுக்கு எப்படிக் கூசுமோ, அதைப்போலவே இம்மாதிரியான இடங்களுக்கும், சனு தனிகள் கூடியிருக்கும் சபைக்கும் போக என் உடலும் ஆத்மாவும் கூசுகிறதே. இது ஏதோ என்பிறவி குறித்து எனக்கிருக்கிற தாழ்வுணர்ச்சி என்று நினைத்து விடாதீர்கள். என்னைப் பற்றி அப்படிப்பட்ட தாழ்வுணர்ச்சி — இப்போது என் முன் நிற்கும் உங்களுக்கு இல்லாவிட்டாலும் என்னைப்போல் உள்ள யாரையோ பற்றி அப்படி ஓர் உணர்ச்சி யாருக்குமே இல்லை என்று நீங்கள் சொல்லிவிட முடியுமா? எல்லாவற்றையும் ஒன்ருக பாவிக்கிற ஆசார்ய ஸ்வாமிகளைப் பற்றி நான் அப்படி ஒருபோதும் கருதுவ தில்லை. அந்த தெய்வத்தை தரிசிப்பதை விடவும் தியானிப்பதே முக்கியம் என்பதை அறிந்து அநுசரித்து வருகிறவன் நான். ஆனுல் மற்றவர்கள் அப்படி இல்லையே? இந்த உணர்ச்சியினுல் தான் எங்களை எல்லாம் மனிதப் பிறவிகளாக்கிய மகாத்மா காந்தி கோயிலுக்குக் கூப்பிட்டபோதுகூட நான் போக மறுத்தேன். ஹரிஜன் என்ருே, இன்னெரு பெயரிலோ மாற்றி அழைத்தாலும் தீண்டத்தகாதவன் என்ற பொருளில்தானே நான் புரிந்து கொள்ளப்படுவேன்''

''சிவசிவா, நீங்கள் தீண்டத்தகாதவர் அல்லர்; தீண்ட முடியாத அளவுக்கு உயர்ந்து விட்டவர்'' என்று சொல்லும்போது கிருஷ்ணனுக்குக் கண் கலங்கிற்று:

''ஸ்வாமிகள் தமது ஞானதிருஷ்டியால் உங்கள் மனசையும் உணர்ச்சிகளையும், நீங்கள் என்ன நினைப்பேள்ங்கறதையும் அப் படியே படம் பிடிச்ச மாதிரி சொன்னுர். நாங்கள் ரெண்டு பேரும் சந்திக்கிறதுதான் முக்கியம். நடுவிலே ஒரு நதி இருந்தால் என்ன? வேலி இருந்தால் என்ன? அவன் வீட்லேதான் பசு இருக்குன்னியே, அதைப் பிடிச்சுண்டு இந்த வேலியோரமா வரச் சொல்லுன்னு அவர் சொன்னதுக்கு இப்பன்னு அர்த்தம் புரியறது! நான் என் அஞ்ஞானத்தாலே மடத்தைச் சேர்ந்தவா ஆட்சேபிப் பாளோன்னு நினேச்சேன். நீங்களே ஆட்சேபிப்பேள்னு என் புத்திக்குத் தோணித்தோ? இப்படித்தான் சுபாவமாகவே சுகமா நடக்க வேண்டிய ஒரு காரியத்தை மனுஷப் பிரயத்தனத்தாலே

சிக்கல் படுத்திண்டுடறது'' என்று கிருஷ்ணன் சொல்லிக் கொண்டி ருக்கையில் ஸ்வாமிகளின் காரியார்த்தமான ஆலோசனையை எண்ணி வியந்தவாறே சொன்னார் ஆதி: ''சரி, மாடு மேய்ச்ச மாதிரியும் ஆச்சு...'' என்ற பழமொழியை முழுசாக நினைத்துச் சிரித்து கொண்டார்.

'எங்கே, வீட்டிலே யாரையும் காணோம்?' என்று கிருஷ்ணன் வீட்டிற்குள் எட்டிப் பார்த்துக் கேட்டான்.

''அவர்கள் எல்லாரும் அங்கேதான் போயிருக்கிறார்கள்'' என்றார் ஆதி.



அந்தப் பழங்காலப் பட்டுப் புடவையில் அம்மா ஒரு பாரம்பர்யப் பெருமையின் பிரதிநிதியாகவே தோன்றினாள். குழந்தையை இடுப்பில் வைத்துக் கொண்டு வேதவல்லியும் அம்மாவும் இன்னும் கட்டி முடிக்கப்படாத அந்தக் கோயிலின் சுற்றுப் பிராகாரத்தைக் கடந்து வந்து கொண்டு இருந்தார்கள். காவிக் கொடிகள் பறக்கின்ற அந்தப் பெரிய பந்தலில் மாலையில் நடக்கவிருக்கும் ஆசார்ய ஸ்வாமிகளின் உபந்நியாசத்தைக் கேட்பதற்காக இப்போதே பக்த கோடிகளின் பெருந்திரள் வந்துகூட ஆரம்பித்து விட்டது. சாதாரணமாக ஆடு மாடுகள் மேய்ந்து கொண்டிருக்கும் அந்தப் பெருந்திடலில் பல வண்ணங்களில் நூற்றுக்கணக்கான கார்கள் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கின்றன.

நேற்று வீட்டுக்கு வந்த அந்தக் கிருஷ்ணசாமி எங்கேயாவது தென்படுகிறாரா என்று வேதவல்லியின் பார்வை தேடிக் கொண்டிருந்தது.

சுவாமிகள் தங்கியிருக்கிற குடிலருகே அவர்கள் வந்து

கொண்டிருந்தார்கள். வேதவல்லியின் கையைப் பிடித்தவாறு மெதுவாய் நடந்து கொண்டிருந்தான் குழந்தை.

திடீரென்று, ''அம்மா, அதோபார் நெஜமாலும் சாமி'' என்று கூவிய மழலைக் குரலைக் கேட்டு 'எங்கே நிஜமாலும் சாமி?' என்று கேட்பது போல் பவழமரத்தடியில் உட்கார்ந்திருந்த சுவாமிகளும் திரும்பிப் பார்த்தார். குழந்தை காட்டிய திசையில் பார்த்த அம்மாவும் மகளும் திடீரென நேர்ந்த தெய்வ தரிசனத்தில்மெய் மறந்து கைகூப்பி நின்றனர். தூரத்திலேயே நின்று தம்மைவணங்கும் மூன்று குழந்தைகளையும் பார்த்து அருகே வரும்படி சைகையால்அழைத்தார் ஸ்வாமிகள். குழந்தைமுன்னால் ஓடினான்; தம் அருகே வந்து நின்ற குழந்தையிடம் இரண்டு பெரிய கற்கண்டு கட்டிகளைஇரண்டு கைகளாலும் எடுத்து நீட்டியவாறு கொஞ்சினார் சுவாமிகள்.



''நிஜமாலும் சாமின்னா பொய்யாலும் சாமியும் வேறே இருக்கோ?'' என்று சிரித்தார். அவர் கேள்வி புரியாமல் கற்கண்டு கட்டிகளைக்கூட வாங்கிகொள்ளாமல் திகைத்துநின்றான் குழந்தை. குழந்தைக்குஉதவியாய் அம்மா வந்து மெல்லிய குரலில் மிகப் பணிவாக வாய் பொத்திச் சொன்னாள்:

''ஆத்திலே இருக்கிற படத்திலே பார்த்திருக்கான்.. இப்ப நேர்லேயே பார்த்தவுடனே 'நிஜமாலும் சாமி'ன்னு சொல்லத் தோணியிருக்கு''

''ஆமாம் ஆமாம், பொய்யான தோற்றங்களில் நிஜஸ்வரூபியான சுவாமியைத் தெரிந்துகொள்வதுதான் பக்தி'' என்றார் ஸ்வாமிகள்.

தூரத்து ஒலிபெருக்கியிலிருந்து சங்கரகோஷம் முழங்கியது. குழந்தையும் தனது மழலை மொழியில் நாளெல்லாம் செவியில் படுகிற அந்த கோஷத்தைத் திரும்பவும் சுவாமிகளின் முன் மொழிந்தது: ''ஜயஜய சங்கல, ஹலஹல சங்கல'' சுவாமிகள் சிரித்து, ''உன் பேலு என்ன?'' என்று அதே மாதிரி மழலையில் கேட்டார்.

''சதாசிவம்'' என்றது குழந்தை. வேதவல்லி குழந்தையிடம் குனிந்து ''கஜானனம்.. சொல்லு கண்ணு'' என்று சொன்னாள். குழந்தை இரண்டு கைகளையும் கூப்பிக்கொண்டு,

''கஜானனம் ... பூதகணாதி ... ஸேவிதம்...
கபித்த ... ஜம்பூபல ... ஸார ... பக்ஷிதம்...
உமா ... ஸுதம் ... சோக ... விநாச ... காரணம்...
நமாமி ... விக்னேச்வர ... பாத ... பங்கஜம்...''

என்று மழலை மொழியில் திக்கித்திக்கி பக்தியுடன் சொல்லக் கேட்டுப் பரவச முற்ற சுவாமிகள் கற்கண்டு கட்டிகளைத் தாளம் போல் தட்டிக்கொண்டு மெய்மறந்து, கண்களைமூடி இடமும் வலமும் அசைந்தார்...

இவர்களை உட்காருமாறு சைகை செய்தார் சுவாமிகள். பவழ மல்லி மரத்தடி நிழலில் அவரெதிரே குழந்தையை மடியிலிருத்திக் கொண்டு அம்மாள் உட்கார்ந்தாள்.

''உன் பெயரென்ன'' என்று சற்று முன் குழந்தையைக் கேட்டது மாதிரியே அம்மாவையும் கேட்டார் ஸ்வாமிகள்.

''சுதந்திர தேவி'' என்று தாழ்ந்த குரலில் சொல்லிக் கொண்டாள் அம்மாள். சுவாமிகளின் இமைகள் சற்றுப் பெரிதாயின...

அம்மாவின் மனம் மடை திறந்து பெருகலாயிற்று. எந்த மொழியிலும் எடுத்துரைக்க முடியாத அனுபவமென்று எல்லாருக்கும் ஒன்று உண்டு. அவற்றை ஏதேனும் ஒரு நேரத்தில் எங்கேனும் சமர்ப்பணம் செய்துவிட முடியும் என்றால் அதற்கேற்ற இடம் இதுவே என்று அவள் வெகு நாட்களாய்க் காத்திருந்தாள் போலும்.

தாயையே தெய்வம் என்று கருதி இருந்த ஒருவர், தெய்வத்தையே தாயாக அடைந்து விட்ட ஒருவர் ஒரு தாயின் ஹிருதயத்தை அறிந்து கொள்வதற்கு மொழி வேண்டுமோ? அவளது கண்ணீரைத் துயரத்தின் அறிகுறி என்று சாமான்யமாக அவர் கருதமாட்டார். காதலாகிக் கசிந்து மல்குகிற கண்ணீரில் வருத்தம், கலக்கம் என்கிற பொய்களை யெல்லாம் கடந்து ஒரு வாழ்க்கையையும் அதன் பொருளையும் புரிந்து கொள்கிற ஞானி அவர்.

அந்த அரக்கு நிறப் பட்டு புடவையின் மேலாக்கில், பெருகி வழிகிற கண்ணீர், திட்டுத் திட்டாய் நீர்க்கரை பரப்புகிறது....

...சதாசிவ ஐயரின் தோள் மீது ஏறி உட்கார்ந்து குடுமியைப் பிடித்து ஆட்டுகிறாள் தேவி. மகாலிங்க ஐயரின் மடியில் ஏறி பூணூலைப் பற்றி இழுக்கிறாள் தேவி. பாவாடை நிறைய சங்கர புரத்து அக்ரகாரத்து மண்ணை அள்ளிக் கொண்டு வந்து திண்ணை முழுக்கக் கொட்டுகிறாள் தேவி. திண்ணையின்மீது செப்பு வைத்து மண் சோறு சமைக்கிறாள் தேவி. வாசலில் நீர் தெளித்துக் கோலம் இடுகிறாள் தேவி. திண்ணையில் வரிசையாக விளக்கேற்றி கார்த்திகை தீப ஜோதியைக் காட்டுகிறாள் தேவி. ஊரெல்லாம் ஏதேதோ பதைப்பில் இரண்டுபட்டு உறுமி நிற்க ஏதுமறியாப் பேதையாய்ப் பாண்டி கிழித்து விளையாடுகிறாள் தேவி. அப்புறம்?

...''பெரியப்பாவும் பெரியம்மாவும்எங்களை விட்டுவிட்டுக் காசிக்குப் போயிட்டா. அப்புறம் அப்பா எங்களையும் அழைச்சிண்டு மூங்கில்குடி ஆஸ்ரமத்துக்கே வந்தார். அந்த ஆஸ்ரமம் நம்ப அக்ர காரத்தைவிடப் புனிதமான இடமாய் இருந்தது. என்னுடைய பாலிய காலம் அங்கேதான் ஆரம்பமாச்சு. என் தலைமுறையைச் சேர்ந்தவர்களை எல்லாம் அந்தக் காலத்திலே நிகழ்ந்த பல தொடர்ச்சியான நிகழ்ச்சிகளேஉருவாக்கி ஆட்டிவைத்தன. பாப்புஜி என்கிற ஒரு மகாபுருஷர் சூத்திரதாரியாக நின்று வெறும் பிண்டங்களாக இருந்த மனிதர்களை உயிரும் ஆத்மாவும்கொடுத்து லட்சிய பொம்மைகளாக மாற்றி ஆட்டினார். அவர் எங்களை அடியோடு குலுக்கி இதுவரை மாமூலாயிருந்த வாழ்க்கையிலிருந்து கிளப்பி ஒரு புதிய வாழ்க்கையோடு பொருத்தி வைத்தார். சரித்திரம் உருவாக்குகிற செயல்களும் நிகழ்ச்சிகளும் தொடர்ந்து மிக விரைவாய் நடந்து கொண்டிருந்தன. அவற்றில் நாங்கள் முக்கிய பங்கும் முழுப் பங்கும் பெற்றிருந்தோம். எப்போதும் எங்கள் மனத்தில், துன்பப்படும்போதும்கூட, தொடர்ந்து ஒரு நிறைவு ததும்பிக் கொண்டிருந்தது. நாங்கள் மகத்தான செய லில் ஈடுபட்டிருந்தோம். சரித்திரத்தை உருவாக்குகிற அணியின் முன் வரிசையில் நாங்கள் சென்று கொண்டிருந்தோம். எங்கள் சிந்தனையும் செயலும் ஒன்றாய் இணைந்திருந்தன. காந்திஜி எங்களைக் கைப்பிடித்து இழுத்து எப்போதும் எங்கள் முன்னே நடந்து கொண்டிருந்தார். ஆனால், ஸ்வாமி.. அந்த வெளிச்சத்தை நாங்கள் திடீரென இழந்து விட்டோம்; குருடர்களாகித் தடுமாறு கின்றோம்...

''ஆஸ்ரமத்துக்குப் போன கொஞ்ச நாளில் அம்மா போய் விட்டாள். அவள் எப்படிப்பட்ட அம்மா! புருஷனைத்தவிர வேறு எதுவுமே அறிந்திராத குழந்தை. ராமனின் பின்னால் காட்டுக்குப் போன சீதை மாதிரி சந்தோஷமாகவே அவள் மூங்கில் குடிக்கு வந்தாள். அவள் இறந்தபோது அப்பா இருந்தார். அப்பா அடிக்கடி ஜெயிலுக்குப் போவார். ஒரு தடவை ஜெயிலுக் குப் போனவர் வரவே இல்லை. ஆஸ்ரமத்தில் அவருக்கு நினைவு நாள் கொண்டாடினார்கள். அம்மாவைப் பிரிந்தபோது அப்பா இருந்த தைரியம், அப்பாவை இழந்தபோது பாப்புஜி இருந்தார் என்கிற நம்பிக்கை! நாங்கள் லட்சிய வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருந்தோம்....

''அங்கேதான் இந்த ஆதி ஆஸ்ரமத்தில் எனக்குத் தோழனும் வளர்ந்து துணைவனுய் ஆனர். அவரை அப்பா நாலு வேதமும், ஆறு சாஸ்திரமும் அறிந்த பண்டிதனுய் ஆக்கி வைத்திருந்தார். நாங்கள் ஒரு லட்சியத்துக்காகவே இல்லறம் ஏற்ருேம். ஆனல் திடீரென்று எல்லாத் திசைகளும் அடைந்து போயிற்றே, ஸ்வாமி! . . . .

''காந்திஜி என்கிற அந்தப் பெரும் நம்பிக்கை தகர்ந்து ஆஸ்ரமம் ஏன்பது அரசாங்கத்திடம் மானியம் பெற்று ஜீவிக்கிற அனுதை இல்லம் போன்றும், அங்கஹீனர் வாழும் விடுதி போன்றும் ஆயிற்றே...

''சுயம்வரத்தில் மாலேயிட்டது போல் நான் தேர்ந்தெடுத்துக் கொண்ட எனது தோழர் இந்த யுகத்தில் நான் அறிந்துகொண்ட உத்தம பிராமணர் ஆவார். யுகாந்திரமாக ஆத்ம சிரேயசும், தேச க்ஷேமமும் தந்து வந்த ஒரு தர்மத்தின் மிகச் சிரேஷ்டமான பிரதிநிதியாய் வாழ்ந்த பிராமணுேத்தமருக்குப் பிறந்தவளாகிய நானே இதற்கு சாட்சி. சாஸ்திரங்களிலே சொல்லியிருப்பது போல் பொருளாசையே இல்லாதவர் இவர். வேதத்தைக் காதால் கேட்டே பாடம் பண்ணியவர் இவர். அத்யயனம் செய்வது தவருமல் இன்னெருவனுக்கு ஓதி வைக்கிற அத்யாபனமும் செய்தவர் இவர். இருந்தும் தன்னே ஒரு ஹரிஜன் என்றே அவர் அழைத்துக் கொள்கிருர். அதற்கு அவர் கொண்டிருக்கிற பொருள் மிக மேன்மையானது. ஆத்ம அபிவிருத்திக்கு எந்த அளவு அவசியமோ, அநுகூலமோ அந்த அளவுக்கு மட்டுமே சரீர போஷணம் செய்து கொள்கிறவர் அவர். எனது தந்தையின் மூலம் அவர் கற்று, நம்பி, ஒழுகி வந்த ஓர் உயர்ந்த வாழ்க்கை நெறியை எல்லாரும் கைவிட்டாலும், அந்த ஆஸ்ரமமே கை விட்ட போதிலும் இன்று வரை அநுசரித்து வருகிற மிக உன்னதமான சமூக ஜீவி அவர். இப்போது நான் அணிந்து கொண்டிருக்கிற இந்தப் பட்டுப் புடவை தவிர எங்கள் ஆடையின் ஒவ்வொரு இழையும் எங்களால் நூற்கப்பட்டவை...

''ஆஸ்ரமத்தை விட்டு இறுதியாக நாங்கள் வெளியேறினேம். அப்போது எங்கள் மூத்த மகன் மகாலிங்கத்துக்கு ஒரு வயது கூட முடியவில்லே. ஜீவனேபாயத்துக்காக இந்த ஊர் மகளிர் பள்ளியில் நான் ஓர் ஹிந்திப் பண்டிதையாக உத்தியோகம் ஏற்க இவரிடம் மிகுந்த சிரமத்துக்குப் பிறகு அனுமதி பெற்றேன். இவர் சுய சிரம ஜீவிதத்தையே சுதர்மமாகக் கொண்டவர். அரசாங்கத்தாரும், அக்கால நண்பர்களும் இவரது தியாகத்துக்கு மானியமும் பிழைப்பதற்கு வழியும் காட்ட முன்வந்தபோது இவர் அவற்றை மறுத்துவிட்டார். இந்தக் காலத்தில் பெருகி வந்த பொய்யான நாகரிக வெள்ளத்தில் நானும் என் குழந்தைகளும் அடித்துச் செல்லப்படாமல் காத்த தீரர் இவர்...

''ஆனலும் எங்களது லட்சியமும் அனுபவமும் எங்கள் பிள்ளேகள் கூட நம்ப முடியாத பழங்கதையாகி விடுமோ என்கிற அச்சம் நாளும் எனக்குப் பெருகி வருகிறது. இந்தக் காலத்துப் பிள்ளேயாகிய என் மூத்த மகன் எங்கள் மீது எவ்வளவு அன்பும் மரியாதையும் கொண்டிருந்தபோதிலும் என்னேயும் அவரையும்

வெறும் லட்சியக் கிறுக்கர்கள் என்று அபிப்பிராயம்கொண்டு விட்டான். நான் அவனோடு எவ்வளவோ பேசிப் பார்த்தேன். தற்கால நவீன வாழ்க்கைச் சுழலில் சிக்கிவிட்ட அவனைக் கடவுள் தான் காப்பாற்றவேண்டும்—என்று அமைதி அடைகிறேன்....

''ஆனால் எங்களது லட்சியம் நிறைவேறாதது மட்டும்அல்ல; எங்கள் சந்ததியினராலேயே அது கேள்விக்கும், கேலிக்கும் இரை யாவது எவ்வளவு வேதனை தருகிறது!... ஆசிரமத்தில் நாங்கள் வளர்ந்த விதமாகவே எங்கள் குழந்தைகளை நாங்கள் வளர்த்திருக் கிறோம். ஆயினும் இந்தத் தீய சமூகத்தில் நியாயப்படுத்தப்படுகிற சிறுமைகளிலிருந்து அவர்களைக் காப்பாற்ற முடியாமற்போகிறதே. எங்களுக்கு லட்சிய புத்திரனாகப் பிறந்தவன், தன்னைத் தாழ்ந்த சாதியான் என்று பொய்யாய் அங்கீகரித்துக்கொண்டு உத்தியோகம் சம்பாதிக்கப் போனதை என்ன காலவிபரீதம் என் பேன்... அவன் தந்தை அவனைப் பிரஷ்டமே செய்துவிட்டார்.

''ஒருபக்கம் நான் ஏற்றுக்கொள்கிற தர்மத்தினாலும் இன் னொருபக்கம் என்னால் மீற முடியாத தாய்ப்பாசத்தினாலும் இழு பட்டுத் தவிக்கிறேன். அவர் கூறுகிற நியாயங்கள் எனக்குப் புரியாமல் இல்லை; என் மகனின் காரியங்களைச் சரியென்றும் நான் ஏற்கவில்லை. ஜகன்மாதாவாகிய ஈஸ்வரி தனது மக்களில் ஒரு பகுதியை, என்னதான் கர்மபலன் என்ற நியாயத்தைப் பேசியும், உணர்த்தியும், அவர்களையே ஒப்பும்படி செய்தும்... தனது குழந்தைகளை ஒதுக்கி வைத்திருப்பது குறித்து எவ்விதம் துக்கப் படுவாள் என்று நான் உணர்கிற மாதிரி இந்த லோகத்தில் யார் உணர்வார்கள்?...

''இதோ பக்கத்தில் இருக்கிறாளே என் மகள்... இந்த வேத வல்லி, நான் வளர்ந்த ஆசிரமச் சூழல் கிட்டுமானால் எப்படிப் பட்ட லட்சியப் பெண்ணாகத் திகழ்வாள்! சாதாரண பாசத்தினால் மட்டும் நான் இவ்வாறு எண்ணவில்லை. அவள் என்னோடு மனம் விட்டுப் பேசுகிற ஒரு தோழிபோல் பக்குவம் பெற்றிருக்கிறாள். எங்கள் வாழ்க்கை குறித்துப் பெருமையும் அவள் தந்தையின் கொள்கைகளில் மனம் தழுவிய பிடிப்பும் கொண்டவள்... ஆனாலும் ''சாதிக்கெட்டுப் பிறந்த பெண்'' என்றே குறிக்கப் படுகிறாள். தான் 'கல்யாணமே செய்து கொள்ளப்போவதில்லை' என்று இவள் என்னிடம் கூறுவது, ஏதோ, வெட்கத்தால் சொல் கிற சாமானியப் பேச்சு அல்ல. அதில் உள்ள அவளது தீர்மானத் தையும் உறுதியையும் அறிகிற எனக்குப் பெற்ற வயிறு கலங்கு கிறது... இவள் சந்நியாச மனம் கொண்டு அவ்விதம் சொல்ல வில்லையே... இந்த வாழ்க்கை முடிச்சுக்களைப் பார்த்து ஏற்படுகிற வெறுப்பிலும் விரக்தியிலும், அவநம்பிக்கையிலும் ஒரு பெண் சந்நியாசம் கொள்வது சுயமாகவே ஓர் உயிர் தன்னைச் சித்ரவதை செய்து கொள்வதல்லவா?...

''கடவுளின் அநுக்ரகமோ, இல்லை லீலையோ, வெகு காலத்துக்குப் பிறகு இந்தக் குழந்தை கிடைத்திருக்கிறான்... வரவர நானும் அவரும் எங்கள் கடந்த கால வாழ்க்கையைக் குறித்துக் கவலை கொள்ள ஆரம்பித்துவிட்டோம்... ஒருவர் மாற்றி ஒருவர் அதற்காக வருத்தப்பட்டு அலுத்துக் கொள்கிறோம்.

பிறகு அநுதாபமும் சொல்லிக் கொள்கிறேம். எங்கள் அகவாழ்க்கையில் இருந்த வெளிச்சம் போய், இருளில் நாங்கள் தடுமாறுகிறேம்...''

''தேவி...'' என்ற குரலில் பிரக்ஞை தெளிந்தவளாய் அம்மாள் கண் திறந்து பார்த்தாள். ஸ்வாமிகள் புன்முறுவல்பூத்தார்: ''நீ தாயல்லவா?... உன்மனம் கலங்குவதும் தேவி காமாட்சியே கலங்குவதும் ஒன்றுதான்...'' என்று எண்ணுகையில் அவரது நயனங்களும் பனித்தன....

...''மா சுச: எது குறித்தும் துயரப்படாதே...நீ உனது தர்மங்களைப் போற்றுவதற்குரிய வகையில் ஆற்றி வந்திருக்கிறுய்.. நீ இழந்ததாக எண்ணுகிற வெளிச்சத்தை மீண்டும் பெறுவாய்... இருள் நீங்கும்.. உனது புத்திரியின் விரக்தி மறையும்... அவளுக்கு எல்லா மங்களங்களும் பெருகி வரும்... உனக்கு எல்லா சௌபாக்கியங்களும் பெருகும்....'' என்று ஆசீர்வதித்தார்.

அம்மா மௌனமாகக் கண்ணீர் வடித்ததைக் கண்டு வேதவல்லி மிகுந்த துயரம் கொண்டாள். ஸ்வாமிகள் 'தேவி' யென்று அவளைப் பெயரிட்டு அழைத்ததையும், அவர் கண் மலர்ந்து அவளைப் பார்த்து மலர்ச்சி கொண்டதையும், அவர் வாய் விட்டு அருளிய ஆசி மொழிகளையும் கேட்ட மாத்திரத்தில் துயரம் தவிர்ந்த வேதவல்லி ஸ்வாமிகளை நமஸ்கரித்தாள்.

''அவரைச் வரச்சொல்'' என்று ஸ்வாமிகள் மறுபடியும் இவர்கள் புறப்படும்போது நினைவுபடுத்தி வலியுறுத்திச் சொன்ஞர்.

தெய்வத்தின் குரல் ஒலிக்கிறது: பந்தலிலும் வெளியிலும் ஜனக் கும்பல் அமர்ந்தும் நின்றும் கேட்கிறது. ஆதி ஒரு மதகின் மீது அமர்ந்துகொண்டு, மடியில் அமர்ந்து விளையாடும் குழந்தைக்கு வேடிக்கை காட்டியவாறு வெகுதூரத்திலிருந்து அந்தமொழிகளைத் தாமும் கேட்டார்.

...''ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதர்களின் பெயரில் வந்துள்ள பீடங்களில் இருக்கிற எங்களுக்கு அவரிட்டுள்ள முக்கியமான ஆக்ஞை என்ன வெனில், நாங்கள் எப்போதும் ஈசுவர தியானம் செய்யவேண்டும், மற்றவர்களையும் தியானம் செய்யுமாறு பண்ண வேண்டும் என்பது....

''அவனும் நாமும் ஒன்று என்பதால் அவனே நமக்கு நம்முடைய-அவனுடைய-நிஜசொரூபத்தை அநுக்கிரகித்து விடுவான்!

''நீங்கள் சரியாக நடக்காவிட்டால் உங்களுக்கு குரு என்று சொல்லப்படும் நான் உபயோகமில்லை என்று அர்த்தம். நீங்கள் பாபம் செய்கிறீர்கள். குடிகள் செய்யும் பாபம் அரசனைச்சேரும்; மனைவியின் பாபம் கணவனைச் சேரும். சிஷ்யனின் பாபம் குருவைச் சேரும். அதுவும் ஒருவர் ஜகத்குரு என்றுல் அவரிடம் எவ்வளவு பாபம் வந்து சேரும்?

—ஒருவன் முதுகில் பாண்டியன் பிரம்பால் அடித்தபோது அந்த அடி கடவுள் முதல் கருப்பிண்டம்வரை உறைத்ததாமே அதுபோல் விழுந்த அடியை வாங்கிக் கொண்டு மலைப்பாம்பாய் நெளிகிறது கூட்டம்...

''பிராமண சமூகம் எனக்கு விசேஷமாகக் கட்டுப்பட்டு இருக்கிறது என்று பொதுவாக ஓர் அபிப்பிராயம் இருக்கிறது. 'இவரை ரொம்பவும் ஆசிரயிக்கப்பட்ட இந்த பிராமணர்கள் ஒரு விதத்திலும் திருந்தக் காணோமே?' என்றும் ஓர் அபிப்பிராயம் நிலவுகிறது. எனக்கு எல்லாரும் ஒன்றுதான். வேதத்தை விட்டு விட்ட பிராமணனிடத்தில்தான் எனக்கு அதிருப்தி ஜாஸ்தி...

''மற்றவர்களை அதட்டிக் கொண்டு தன்னை உயர்த்திக் கொண்டாடுவதற்காக ஏற்பட்டதல்ல பிராமணீயம். விளக்கை அணைத்து லோகம் முழுவதையும் நம்மோடு மட்டும் அல்லாமல் காலம் முழுவதற்கும் இருட்டாக்கிவிடாதீர்கள் என்று உங்களைக் கேட்டுக் கொள்ளவே நான் இங்கு வந்திருக்கிறேன். நீங்கள் ரொம்ப சந்தோஷத்துடன் எனக்கு உபசாரம் பண்ணி பேட்டைக்குப் பேட்டை, கொட்டகை, வீதிபவனி எல்லாம் செய்கிற போது உங்கள் மனசைப் புண்படுத்துகிற மாதிரி தோஷங்களைச் சொல்ல நான் கூசுகிறேன். அவரவர்க்கும் வாழ்க்கையில் எத்தனையோ சிரமங்கள். ஒவ்வொருவருக்கும் உள்ள கஷ்டங்களுக்கு எல்லையே இல்லை. இங்கே கொஞ்சம் கஷ்டத்தை மறந்திருக்கலாம் என்று நீங்கள் வருகிறீர்கள். உங்களிடம் இதுதப்பு, அது தப்பு என்று சொல்லி மனசைப் புண்படுத்தலாமா? நீங்கள் சந்தோஷப்படுகிற மாதிரியே ஒரு பேச்சுக் கச்சேரி செய்துவிட்டு நான் போய்விடலாமா? தற்காலிக சந்தோஷமாகக் கச்சேரி செய்வதென்றால் நம் மத்தியில் அதற்கென்றே ரொம்பபேர் இருக்கிறார்கள். என்னை அதற்கு நீங்கள் கூப்பிடவேண்டாம். பணம் வாங்க நான் வரவில்லை. என் கடமையை நான் செய்கிறேன். வாய் வார்த்தையாக இப்படி சொல்வதற்குமேல் நான் உங்களை ஒன்றும் தண்டித்து சிக்ஷைபண்ண முடியாது...

''ஒரு நோக்கம் (purpose) இல்லாமல் வெறுமே இவனும் பணத்தைத் தேடி பறந்து கொண்டிருக்கிறான் என்றால் அப்புறம் இவன் பிராமணன் என்று தனியாக இருக்க வேண்டியதில்லை. இப்படி ''பர்ப்பஸ்'' இல்லாமல் பிராமண ஜாதி இருந்தால் அதை மற்றவர்கள் அழிப்பதற்கு முன்னால் நானே அழித்துவிட வேண்டும் போல் இருக்கிறது. பிரயோஜனம் (purpose) இல்லாமல் ஒரு வஸ்துவும் இருப்பதற்கு உரிமையில்லை. லோகத்துக்குப் பயன் இல்லாவிடில் பிராமணஜாதி வேண்டியதே இல்லை தான்...''

—அவர் தென்றலில் அலையும் நீரலைபோல் மிக மெல்லிய குரலில் பேசினாலும் கூட்டத்திலிருந்த மிகப் பலருக்கு நெஞ்சத்தின் அடியாழம் வரை அந்த வார்த்தைகள் தைத்திருக்கவேண்டும். சிலர் அவர் பேச்சைக் கேட்டு மாலைமாலையாய்க் கண்ணீர் வடித்து மறுகி நின்றனர். வியாபாரம், உத்தியோகம், நாகரிகம், சாமர்த்தியம் என்பதன் பேரால் தாங்கள் மறைந்தும் ஒளிந்தும் சூழ்நிலைகளுக்கேற்ப நியாயப்படுத்தியும் செய்கிற அவலங்களையெல்லாம் இவரது அகக்கண் தூரதரிசினிபோல், சூட்சும தரிசினிபோல்

விட்ட தெய்வம் நீங்கள். பெற்ற மகனையே பிரஷ்டம் செய்து விட்டு இப்போது உங்கள் முன் வந்து நான் நிற்கிறேன். மனித ரிடையே இறுக்கமும், சிக்கல்களும் விளையப்பிணைக்கும் உறவுகளெல் லாம் எவ்வளவு மாயை என்பதை நான் அறிவேன். சம்ஸ்கிருதம் என்கிற தேவ பாஷையின் பரிச்சயத்தால் புலையனாய்ப் பிறந்த எனக்கு தேவ அந்தஸ்தே ஏற்பட்டது. தாங்கள் நேற்று உரைத் தீர்களே, அது போல் எங்கோ ஒரு மூலையில் இருந்துகொண்டு, தியானம் செய்து கொண்டு வேதரட்சணமும், கோ சம்ரட்சணமும் செய்வதில் வாழ்க்கையின் முழுப் பயனும் தெரிகிறது. இப் பொழுது எனது கவலை எல்லாம் தேவரீர் திருவுள்ளம் கொள்கிற கவலைக்கு ஒப்ப நமது சந்ததியினரைப் பற்றிய கவலைதான்... ஸ்வாமி.''

ஆதி மௌனமாய்த்தான் இருந்தார். தாம் பேசினோமா சிந்தித்தோமா என்று தெரியாமல் ஒரு திகைப்புடன், ஏதோ அத்து மீறி நடந்துவிட்டது போன்ற உறுத்தல் உணர்ச்சியுடன் தன்னை மன்னிக்குமாறு பிரார்த்தித்து ஸ்வாமிகளைச் சிரம் தாழ்த்தி வணங் கினார்.

''ஸ்வாமி! தங்கள் தரிசனத்துக்கு வருகிறவர்களெல்லாம் தமது துயரங்களையும், தமது ஆசைகளையும் ஒரு வினாடி உங்களை சாட்சியாக வைத்து நிவேதனம் செய்து கொண்டு போகி றார்கள். அப்படி ஒரு அபிலாஷையை நிவேதனம் செய்யவே நானும் வந்தேன்...

''சொல்லு'' என்று வாய்விட்டுக் கேட்டார் ஸ்வாமிகள்.

''தங்கள் காலத்தில் தீண்டாமைக் கொடுமை முற்றாகத் தொலைந்தது என்று ஆக வேண்டும். இதுவே என் அபிலாஷை!'' என்று கூறி நமஸ்கரித்தார் ஆதி:

''இந்த பிராமண ஜாதியை அழித்துவிடலாம் என்று தோன்று கிறது என்று நேற்று தாங்கள் சொன்னீர்களே, அதைக் கேட்டு அப்போது நான் மனம் பதைத்துப் போனேன். அழித்தால் ஆக்கவும் வேண்டும். அந்த ஆக்கசக்தியாய் தாங்களே திகழ்கிறீர் கள் என்று பின்னர் யோசித்து நான் புரிந்துகொண்டேன். ஆம்; புதிய பிராமணனை ஆக்கித் தாருங்கள். அந்த முயற்சியில் தீண் டாமை என்னும் பெரும் சமூகத் தீமையை அழியுங்கள். தற்கால நாகரிக வாழ்க்கை வெள்ளத்தில் என் சீமந்த புத்திரனை நான் இழந்துவிட்டேன். ஒரு நெறியிலிருந்து பிறழ்ந்தவர்கள் எந்த சமூகத்திலும் விலக்கி வைக்கப்படத்தான் வேண்டும். இதற்காக ஒரு தாய் அழுவாள்தான். ஒரு பிள்ளையைப் பிரஷ்டம் செய்து விட்ட நான் மற்றொரு பிள்ளையையாவது மறுபடியும் இந்த வெள்ளத்தில் இழந்துவிடலாகாது. இவனைக் காப்பாற்றித் தாருங் கள்; எங்களுக்கு காந்திஜி இல்லை. ஆனால் அவரும்கூட காப்பாற்றி இருக்க முடியாது என்று தோன்றுகிறது! ஸ்ரீராமானுஜர் செய்ததே போன்று புதிய பிராமணர்களை உருவாக்க வேண்டிய தருணம் வந்துவிட்டது. வேதத்தை பிராமணன் விட்டுவிட்டான் என் றீர்கள்? அவன் விட்டு விட்டதற்காக எல்லாரும் அதை விட்டுவிட வேண்டுமோ? வேதத்தைக் கைவிடுவதாவது? பூமியை நீங்கள் உதறி விடுவதாவது? வேதம் ஓதுவதைக் கடமையாகக் கொண்டவன்

அதைக் கைவிட்டதால் அந்தக் கர்மாவின் பலனை அனுபவிக்கிறான்! அவர்கள் புலையருக்கும் மிலேச்சருக்கும் போட்டியாகி அதிலே வெற்றிபெற்று விட்டார்கள். அவர்களைக் குறித்து எவ்வளவு காலம் ஒரு தாயின் நிலையிலே இருந்து இரங்கி அழுதுகொண்டிருக்கப் போகிறீர்கள்? ஒரு மகன் பிரஷ்டம் செய்யப்படுகிறபொழுது இன்னொரு மகன் இருந்தும்கூட ஒரு தாய் அழுகிறாளே அது அந்தத் தாயின் இயல்பு. ஆனால், இருக்கிற இன்னொரு மகன் இனிவரும் வாழ்க்கைக்கு நம்பிக்கை அல்லவா? நொந்தவர்களை நோகப் பண்ணுவதால் பயன் இல்லை. அவர்கள் வழியில் அவர்கள் போகட்டும். போனவர்கள் போகட்டும்; இனி இருக்கப் போகிறவர்களையும் என்றுமுள வேதத்தையும் இணைத்து லோக க்ஷேமத்திற்கு வழியும் வெளிச்சமும் காட்டவேண்டும். ஆலயங்களை எழுப்புகின்ற நமது திறமை எக்காலத்திலும் அழிந்து போய்விடாது. அவற்றைப் பரிபாலிக்கிற யோக்யதையைத்தான் நம்மால் காப்பாற்றிக்கொள்ள முடியவில்லை. நம் தேசத்திலுள்ள ஒவ்வொரு ஆலயத்தையும் சார்ந்து ஒரு ஆஸ்ரமம் எழுதல் வேண்டும். நமது பூமியில் இருக்கும் கோயில்களின் தொகையை எண்ணிப் பார்க்கிறேன்... அவையெல்லாம், சிறிதும் பெரிதுமான, கோயில்கள்தான்; அதேபோல் சிறிதும் பெரிதுமான ஒன்றோடு ஒன்று பொருந்திய ஆசிரமங்கள் அந்த ஆலயங்களைச் சுற்றி எழ வேண்டும் என்பது என் கனவு; பிரார்த்தனை... நான் அதிகப் பிரஸங்கம் செய்வதாய் எண்ணவேண்டாம். தாங்கள் அழைத்ததால் வந்தேன்; தாங்கள் ஆக்ஞையிட்டதால் பேசுகிறேன்'' என்று மறுபடியும் ஒருமுறை வினயமாய்த் தலை வணங்கினார்.

''மேலே பேசு'' என்பதுபோல் ஸ்வாமிகள் கை உயர்த்திச் சைகை காட்டினார்.

''இதனால் எல்லாப் பிரச்னைகளும் தீர்ந்துவிடாது. ஆனால் இந்தப் பிரச்னைக்கு இதுதான் தீர்வு. தாங்கள் மலையுச்சியில் ஏறி நிற்கிறீர்கள். நான் சமுத்திரத்தில் விழுந்து தவிக்கிறேன். என் மகன் ஹரிஜன் என்பதற்காகச் சலுகை உண்டென்றால், அந்தச் சலுகை அவனையும், அவனைப்போன்றோரையும் பிராமணர்களாக்குவதற்கே இருக்கட்டும்...

''நான் முன்னோர்களை விமர்சனம் செய்வதாய் எண்ணவேண்டாம்... அவர்கள் தோற்றுத்தான் போய்விட்டார்கள். அந்தத் தோல்வி இறுதியானது அல்லவென்றாலும், ஒரு இடைக்கால சறுக்கலாய்க்கூட அது ஏன் நேர்ந்தது? என்று சிந்திப்பது அபசாரமாகாது. ஆலயத்தில் ஹரிஜனப் பிரவேசம், சேரியில் ஆஸ்ரமம் என்று ஏற்படுத்தியதால்தான் இரண்டும் அழிந்ததோ? முன்னோர்களை விமர்சனம் செய்வதுகூட நமது பின்காலப் பாதையைச் சரியாகச் செப்பனிட்டுக் கொள்ளத்தான். அதனால்தான் எனக்கு அனுபவத்தால் தோன்றுகிறது: ஆலயங்களையும் ஆஸ்ரமங்களையும் ஒன்று சேர்ந்து விடவேண்டும். அதாவது ஒவ்வொரு ஆலயத்தையும் சார்ந்து ஒரு ஆஸ்ரமம் ஏற்படுத்திவிட வேண்டும். 'அதுவே பிராமணர்களை உருவாக்கும் பட்டறையாக வேண்டும்! மற்றவர்கள் யாரும் தங்களை பிராமணர்கள் என்று நினைத்துக் கொண்டோ அல்லது நிந்திக்கப்பட்டுக்கொண்டோ அவஸ்தையுற வேண்டாம். ஒரு சமூகத்தைச் சேர்ந்த மனுஷர்கள் என்கிற முறையில் அவர்கள்

செய்கிற காரியத்துக்கேற்ற பலன்களை—அல்லது பாபங்களை, அவர்கள் அனுபவித்துக் கொள்ளட்டும்.' இதை நமது கலாசாரத்தின் தலைவரான தாங்கள் பிரகடனம் செய்யவேண்டும். தங்களைத் தவிர வேறு எவரும் இதை வெற்றிகரமாகச் செய்ய முடியாது.

''இந்தியாவில் எவ்வளவு கோயில்கள் இருக்கின்றன! அவை காலப் புழுதியில் கரைந்து போகிற வெறும் கட்டிடங்களா? அந்தக் கோவிலிலிருந்து செயல் வீரர்கள் என்று நூற்றுக்கணக்கில் புறப் படட்டும். அந்தப் பிராமணர்கள் சம்சார வாழ்க்கையை மேற் கொள்வதா? சந்நியாசியாவதா? என்பது பின்னர் தீர்மானிக்கப் படட்டும். ஆனால் அவர்கள் முதலில் பிராமணர்களாக ஆகட்டும். அதற்கு முதல் அங்கத்தினனாய் என் குழந்தை சதாசிவத்தை உங்களுக்கு அர்ப்பணிக்கிறேன். இங்கே ஒரு கோயில் கட்டிக் கொண்டு இருக்கிறீர்கள். இதன் பக்கத்திலேயே ஓர் ஆஸ்ரமத்தை ஏற்படுத்தி விடுங்கள். பிராமணதர்மத்தையும், வேத வாழ்க்கை யையும் மீண்டும் நமது சமூகவாழ்க்கையாக உருவாக்கப்போகிற ஒரு ஆஸ்ரமத்துக்கு நான் செய்யும் புத்திரதானத்தை ஏற்றுக் கொள் ளுங்கள் ஸ்வாமி'' என்று தலைவணங்கிக் கை கூப்பி நின்ற ஆதி, தாம் என்ன காரியம் செய்து கொண்டிருக்கிறோம் என்று யோசித் தார்... சதாசிவத்தைப் பார்த்தார், கண்கள் கலங்கின; பாசம் யாரை விட்டது?

ஸ்வாமிகள், தம் பக்கத்தில் மரத்தடியில் உதிர்ந்து கொண் டிருக்கிற பவழமல்லிகைகளைக் கை நிறைய சேர்த்துக் கொண் டிருக்கும் குழந்தையைப் பார்த்தார்.

சங்கரரை முதலை இழுத்த கதை நினைவுக்கு வந்தது. குழந் தையை அருகில் அழைத்தார். கை நிறைய மலர்களுடன் அவரை நெருங்கினான் சதாசிவம். ''நான் உனக்கு ஒரு கதை சொல் லவா?'' என்று கொஞ்சினார் ஸ்வாமிகள். கதை என்றதும் சதா சிவத்தின் கண்கள் மலர்ந்தன.

''ஆரியாம்பாளும் அவள் குழந்தை சங்கரனும் வழக்கம் போல் நதியிலே ஸ்நானம் பண்ணப் போனாளாம்...''




மோதி பிரசுரம், சென்னை 600 017. அச்சிட்டோர்:
நாதன் & கம்பெனி, சென்னை 600 042. ஓவியம்: ஜெயகுமார்.




# ஜெயகாந்தன் நூல்கள்

## நாவல்

| | | |
|---|---|---|
| ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள் - மக்கள் பதிப்பு | 5 | 00 |
| சில நேரங்களில் சில மனிதர்கள் - மக்கள் பதிப்பு | 5 | 00 |
| ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம் | 11 | 00 |
| சினிமாவுக்குப் போன சித்தாளு | 4 | 00 |
| பாரிசுக்குப் போ | 10 | 00 |
| ரிஷிமூலம் | 5 | 00 |
| உன்னைப்போல் ஒருவன் | 5 | 50 |
| கோகிலா என்ன செய்துவிட்டாள் | 4 | 25 |
| வாழ்க்கை அழைக்கிறது | 5 | 00 |
| பிரளயம் | 3 | 75 |
| பிரம்மோபதேசம் | 2 | 50 |
| கருணையினால் அல்ல | 2 | 25 |
| யாருக்காக அழுதான் | 3 | 50 |
| கைவிலங்கு | 2 | 75 |
| இந்த நேரத்தில் இவள் (அச்சில்) | | |

## சிறுகதைகள்

| | | |
|---|---|---|
| குருபீடம் | 5 | 00 |
| யுகசந்தி | 6 | 50 |
| இறந்த காலங்கள் | 4 | 75 |
| உண்மை சுடும் | 5 | 00 |
| தேவன் வருவாரா | 5 | 00 |
| சுயதரிசனம் | 4 | 00 |
| புதிய வார்ப்புகள் | 4 | 00 |
| சுமைதாங்கி | 4 | 00 |
| மாலை மயக்கம் | 4 | 10 |
| இனிப்பும் கரிப்பும் | 4 | 00 |
| ஒரு பிடி சோறு | 4 | 00 |
| சக்கரம் நிற்பதில்லை | 4 | 00 |

## கட்டுரைகள்

| | | |
|---|---|---|
| ஓர் இலக்கியவாதியின் அரசியல் அனுபவங்கள் | 15 | 00 |
| அவர்கள் உள்ளே இருக்கிறார்கள் | 4 | 00 |

**மீனாட்சி புத்தக நிலையம்**

60, மேலக்கோபுரத் தெ[illegible] மதுரை-625001.

கிளை : 403, திருவல்லிக்கேணி நெடு[illegible]ாலை, சென்னை-5.

தொலைபேசி எண்கள் : சென்னை : 84571[illegible] மதுரை : 2297[illegible]

ஜனவரி வெளியீடு!

ஜெயகாந்தனின்



# மனவெளி மனிதர்கள்

ஒரு நாவல்